# கற்பு

## அல்லது

# நாகரீகப் பெண்

ரா. வெங்கடாசலம்



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

நாடகம்

# கற்பு அல்லது நாகரீகப் பெண்

ரா. வெங்கடாசலம்

எழுதியது





[விலை ரு. 1.

முதற் பதிப்பு: அக்டோபர் 1943.



கற்பு நிலையென்று சொல்ல வந்தா ரிரு
கட்சிக்கு மஃது பொதுவில் வைப்போம் —பாரதி.

# ஒரு வார்த்தை

எனது நெருங்கிய பந்துவும் ஆப்த நண்பருமான ஸ்ரீ மீ. அமிர்தலிங்கம் பிள்ளை அவர்கள் தன்னுடைய மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியில் நடிக்க, என்னைச் சில நாடகங்கள் எழுத விரும்பினார். அதன் பயனாக 'கற்பு அல்லது நாகரீகப் பெண்' எனும் சமூக நாடகமும் 'புத்த பகவான்' எனும் பெரியாரின் வாழ்க்கை சரிதமும் எழுதினேன்.

பலர் வேண்டுகோளிற்கிணங்க 'கற்பு அல்லது நாகரீகப் பெண்' நாடகத்தை புத்தக ரூபமாய் வெளியாக்கி இருக்கிறேன். இதில் வெளியிடப்பட்டிருக்கும் படம் மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியார் நடித்தபோது எடுக்கப் பட்டது. கதையின் தாரதம்மியத்தைப்பற்றி வாசகர்களின் முடிவிற்கே விட்டுவிடுகிறேன். கூடிய சீக்கிரம் 'புத்த பகவா'னும் புத்தக ரூபமாய் வெளிவரும்.

இவை சட்டபூர்வமாய் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறபடியால் என் அனுமதி இல்லாமல் நாடகமாக நடிக்கவோ, சினிமாவில் படமெடுக்கவோ, வேறு பாஷைகளில் மொழிபெயர்க்கவோ, பெயர்களை மாற்றியோ, தழுவி வேறுவிதமாக அமைக்கவோ கூடாதென அறிவித்துக் கொள்ளுகிறேன்.

இதை எழுதத் தூண்டிய ஸ்ரீ மீ. அமிர்தலிங்கம் பிள்ளை அவர்களுக்கு நன்றிசெலுத்துகிறேன்.

சச்சிதானந்தம் பிள்ளை சந்து,
யானைக்கல் தெரு, மதுரை.
28—10—1943.

ரா. வெங்கடாசலம்.

# நடமாட்டம்

★

**V. பத்ரா:** காந்தா கம்பெனியின் முதலாளி. வீரபத்திரன் எனும் தன் பெயரை V. பத்ரா என மாற்றிக்கொண்டவர்.

**சுந்தரம்:** கதாநாயகன்

**கவிராஜ்:** காந்தா கம்பெனி மானேஜர்

**பழனி:** செவிட்டு வேலைக்காரன்

**ராஜு:** துப்பறிபவன்

**கோமதி:** சுந்தரத்தின் மனைவி

**காந்தா:** V. பத்ராவின் மகள். மனம்போனபடி நடப்பதே நாகரீகமெனத் திரியும் பெண்.

**குப்பி:** பழனியின் மனைவி

**லெக்ஷ்மி:** பழனியின் மகள்

இன்ஸ்பெக்டர்: கோவிந்தராஜுலு நாயுடு

வக்கீல்: ராமசாமி அய்யர்

வக்கீல்: ராகவய்யங்கார்

ஜட்ஜ் மற்றும் பலர்.

★

Dani

# கற்பு

அல்லது

# நாகரீகப் பெண்

---

## 1-வது சீன்

### பத்ராவின் மாளிகையின் உட்புறம்

[காந்தா, உதடுகளுக்கு வர்ணம் தீட்டிக்கொண்டிருக்கிருள். வேலைக்கார பழனி ஒருபுறம் அம்மானை பாடிக்கொண்டிருக்கிருன்.]

காந்தா: அடே பழனி! அடே செவிடு! இந்த செவிட்டு மண்ணேடு கட்டி அழறது......

பழனி: ச்சோ! அந்த ராவணனுக்கு எவ்வளவு உம்மத்தம்? அந்த பதிவிரதையிடமா அவன் ஜம்பம் சாயும்?

காந்தா: (எழுந்துவந்து) அடே! கூப்பிடுகிறது காது கேட்கவில்லையோ?

பழனி. அம்மா, நீங்க கூப்பிட்டேங்களா?

காந்தா: உம், my callஐ attend பண்ணுமல் உளறிக்கொண்டிருக்கிருய்!

பழனி: காலிலே ஒன்றுமில்லேம்மா! அந்த ராவணப் பயல் சீதையிடம், "பெண்ணே என்னைக் கட்டிக்கோன்னு" சொல்றப்போ...அவ துடிச்ச துடியை அடடா...சொல்லமுடியலேம்மா! அத்தை படிச்சுண்டிருந்தேன்.

காந்தா: உஸ் fool! போய் மிஸ்டர் கவிராஜுவை கூட்டிவா. soon!

பழனி: அதுவாம்மா! அப்படி எல்லாம் கூட்டிட்டுப் போகலியாம். அவன் பூமியோட பேத்துக்கிட்டுப்போயிட்டானும். எம்மா, ராமர் பெண்டாட்டியல்லவா சீதை! அவள் இன்னொருத்தனை கலியாணம்செய்ய எப்படியம்மா சம்மதிப்பாள்?

காந்தா : அடே nonsense! என் நேரத்தையெல்லாம் இந்த செவிட்டுச் சனியனோடு waste செய்கிறேனே! அடே! அந்த அத்தைப்பாட்டிக் கதையையா நான் கேட்டேன்? போய் மிஸ்டர் கவிராஜுவைக் கூட்டிவா.

பழனி : அதுவா? கூட்டியாரவா?

காந்தா : ஆமா! ஆமா!! மிஸ்டர் கவிராஜுவை.

பழனி : அய்யாவையா? இதோ—

காந்தா : ஆமா ; don't delay.

[பழனி செல்கிறான்.]

காந்தா : சீதை, ஒருத்தன் மனைவி. ராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு போனான். அவள் பதிவிரதை. அதனால் அவனுக்கு மறுத்துவிட்டாள். தொட்டால்கூட எரிஞ்சு போய் விடுவான். என்ன தந்திரம்! நல்ல கற்பனை! பெண்களை ஏமாற்றி அவர்கள் அடிமையாகவே செத்து மடிய நல்ல சூழ்ச்சி. This should be broken. இனி பெண் சமுதாயம் இதைச் சகிக்காது.

[பழனி வருகிறான்.]

பழனி : அய்யா வந்துட்டாரு, அம்மா!

[பத்ரா வருகிறார்.]

காந்தா : உஸ், இவரையா கூட்டிவரச் சொன்னேன்? அப்பா, மிஸ்டர் கவிராஜுவை எங்கே? அவருக்காக ரொம்ப நேரமாய் காத்துக்கொண்டிருக்கிறேன். அடே! உன்னை யாரைக் கூட்டிவரச் சொன்னேன்?

பழனி : நான் வேகமாய்தானுங்கோ ஓடினேன். ஐயா வழியிலே வந்துட்டாரு. நான் ஒரு இடத்திலேயும் தங்கவே இல்லே.

[காந்தா ஒரு சிகரெட்டை பத்ராவுக்குக் கொடுத்து தானும் ஒன்றைப் புகைக்கிறாள்.]

காந்தா : வாக்கிங்குக்குப் போகலாமென எதிர்பார்க்கிறேன். இன்னும் காணவில்லே. Too late.

பத்ரா: காந்தா, இன்று ஆபீஸில் மிஸ்டர் கவிராஜுவுக்கு ரொம்ப அலுவல்; இன்னும் சில நிமிடங்களில் வரலாம்.

[கவிராஜ் வாக்கிங் ஸ்டிக்குடன் வருகிறான்.]

காந்தா: ஹலோ மிஸ்டர் கவிராஜ்! ரொம்ப நேரமாய் எதிர் பார்த்தேன்.

கவிராஜ்: தயவுசெய்து excuse பண்ணுங்கள். வழியில் ஆப்த நண்பர் ஒருவரை சந்திக்கும்படி ஏற்பட்டது. அதனால் தாமதமாகிவிட்டது.

[நாற்காலியில் உட்காருகிறான்.]

பத்ரா: இன்னும் சில நிமிஷங்களில் வந்துவிடுவீர்களென இப்போதுதான் சொல்லிமுடித்தேன். காந்தா! மிஸ்டர் கவிராஜு வுக்கு ஒரு சிகரெட் கொடு.

காந்தா: (கைக் கடிகாரத்தைப் பார்த்து) ஹோ! four-ten! மிஸ்டர் புறப்படலாமா?

கவி: Yes!

[காந்தா, கவிராஜுவின் tieஐ சரிப்படுத்துகிறாள்.]

காந்தா: அப்பா, பீச்பக்கம் போய்வருகிறோம்.

கவி: Good-bye.

[காந்தாவும், கவிராஜுவும் கைகோர்த்துச் செல்லுகின்றனர். ஒருபக்கம் பழனி அம்மானை படிக்கிறான்.]

## 2-வது சீன்

### கடற்கரை

[காந்தாவும், கவிராஜுவும் பிரவேசம்.]

காந்தா: மிஸ்டர் கவிராஜ்! இந்த நாட்டில் எங்கள் பெண் இனம் இருக்கும் பரிதாப நிலையை நினைக்கும்போது ஆத்திரம் அடக்கமுடியவில்லை. ஏன் மிஸ்டர்! ஆண்களுக்கு பெண்கள்

எந்த வகையிலும் தாழ்ந்தவர்களா? ஒருபோதும் இல்லை என அபிப்பிராயப்படுகிறேன்.

கவிராஜ்: நானும் அதை ஆமோதிக்கிறேன் காந்தா!

காந்தா: சீதை என்றும், தமயந்தி என்றும், நளாயினி என்றெல்லாம் கதை திரித்திருக்கிறார்களே! அதன் நோக்கத்தைப் பார்க்கப் பார்க்க மிஸ்டர் எனக்கு ஆண்கள்மேல் மிகவும் கோபம் பொங்குகிறது. பெண்களுடைய உணர்ச்சியை அடக்கிவிட ஆண்கள் கையாண்ட பெரிய சூழ்ச்சியல்லவா இது?

கவிராஜ்: நான் இதை ஆக்ஷேபிக்கமுடியாது காந்தா! ஆண்கள் தங்கள் சுயநலத்திற்காகவே இப்படி பெண் இனத்தை அடிமைப்படுத்தியிருப்பதை எந்த அறிவாளிதான் சகிக்கமுடியும்? நான் அதை முற்றிலும் வெறுக்கிறேன். தவிர உங்களைப்போன்ற நவநாகரீக நாரிமணிகள் தோன்றியபின் அந்தச் செல்லரித்த ஏடுகள் அழிந்துபோவது நிச்சயம். மேற்கத்திய நாகரீகம் நம் கண்களைத் திறந்துவிட்டது. இனி யாரும் ஏமாற்றமுடியாது.

காந்தா: ஆம். Quite right.

[காந்தாவின் மேல்துணி காற்றடித்து கீழே விழுகிறது. கவிராஜ் அதை எடுத்து அவளுடைய முதுகின்மேல் போடுகிறான்.]

Thank you mister.

[ஒரு நண்பன் பிரவேசம்.]

காந்தா: ஓ! மிஸ்டர் வேணு!

வேணு: குட் மார்னிங்!

கவி: குட் மார்னிங்!

வேணு: உங்கள் marriage ஐப்பற்றிக் கேள்விப்பட்டேன்!

கவி: ஆமாம் பிரதர். Next weekதான்.

காந்தா: Next weekல் தான். அன்று evening பார்ட்டிக்கு வந்துவிடணும். மிஸ்டர் வேணு! புதுமுறையாக எங்கள் marriageஐ arrange பண்ண உத்தேசம். வைதீகம், புரோகிதம், அது இது எல்லாம் கிடையாது. ரொம்ப நாஸுக்கான முறையில்.

வேணு: I see. நான் கட்டாயம் functionக்கு attend பண்ணுவேன். நான் வருகிறேன். Good-bye. (செல்லல்.)

காந்தா: மிஸ்டர்! நம் கல்யாணத்தைப்பற்றி இன்றே அப்பாவிடம் சொல்லி சீக்கிரமாக ஏற்பாடுசெய்ய வேண்டும்.

கவி: ஆமாம். நாளையே invitation card print பண்ணச் செய்யலாம்.

காந்தா: Let our heart take to the goal.

கவி: இந்த ஈவினிங் டயத்தில் கடற்காற்றுக்கும், மங்கின வெயிலுக்கும் மத்தியில் உன் அழகிய முகத்தைப் பார்க்க, காந்தா நான் மிகவும் பூரிக்கிறேன். I love you very much.

## 3-வது சீன்

### ஹால்

[காந்தா, கவிராஜ், பத்ரா டீ குடித்தல்; பழனி வருகிறான். கலியாண பத்திரிகையின் புரூபை கொடுக்கிறான்.]

பத்ரா: (வாசித்து) பேஷ்! இன்றே நான் பிறந்த பாக்கியத்தை அனுபவிக்கிறேன். புதுமாதிரியான பத்திரிகை.

காந்தா: அப்பா அதை வாசியுங்கள்.

பத்ரா: (மூக்கு கண்ணாடியை சரிப்படுத்திக்கொண்டு) மிஸ்டர்.........அவர்களுக்கு,

எங்களுடைய காந்தா காட்டேஜில் நாங்களிருவரும் இருபத்தி எழு-எட்டு-முப்பத்தெட்டில் வாழ்க்கைத் துணையாக ஒப்பந்தம் செய்து கொள்ளுகிறோம். பழைய மூடப்பழக்கங்கள், வைதீகம், புரோகிதம் இவைகள் இல்லாமல், மனித அறிவுக்கு வேலை கொடுத்து சீர்திருத்தமுறையில் நடத்துகிறோம். நண்பர்களும், சீர்திருத்தவாதிகளும் தவறாமல் attend செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

இப்படிக்கு,
காந்தா & கவிராஜ்

ஆஹா! மிகவும் அருமை. பேஷ்! கலியாணம் செய்து கொள்ளப்போவது நீங்கள் இரண்டு பேரும்தானே. நீங்கள்தான் அழைப்பு அனுப்பவேண்டியது. ரொம்ப சரி!

காந்தா: அப்பா! அதுமட்டுமா? கலியாணப் பத்திரிகை அடிக்கிறார்களே, தகப்பனுடைய பெயரைத்தானே போடுகிறார்கள்! தாயின் பெயரைப் போடுகிறார்களா? பெண்களுக்கு தலை நிமிர்ந்து பார்க்கக்கூட சுதந்திரம் இல்லை.

பழனி: அம்மா! ஒரு சந்தேகம். பத்திரிகையில் வாழ்க்கை ஒப்பந்தமுன்னு போட்டிருக்கே அப்படின்னா என்னும்மா?

காந்தா: 'கலியாணம், கலியாணம்' என்கிறார்களே, அதற்குத்தான் வாழ்க்கை ஒப்பந்தம் என்பது. இதுதான் சரியான பெயர்.

பழனி: பெயரா அம்மா? அது யார் பெயர்?

காந்தா: சூ! செவிடு. Get out.

## 4-வது சீன்.

## சுந்தரம் வீடு

[சுந்தரம் சோபாவில் சாய்ந்திருக்கிறான். கோமதி அவனுடைய கால்களை வருடிக்கொண்டிருக்கிறாள்.]

சுந்: கண்மணி கோமு! இந்த உலகத்தில் நீ அதிகமாய் விரும்புவது என்ன?

கோம: இந்த உலகத்திலா? நான் விரும்புவது தாங்கள் ஒருவர் தான்.

சுந்: என்னைத்தானா? என்மேலா உனக்கு அதிகப்பிரியம்?

கோம: கேலி செய்கிறீர்கள் போலிருக்கிறது? பெண்கள் புருஷனைத்தான் விரும்புவார்கள். அவர்களுக்கு புருஷன்தான் தெய்வம்.

சுந் : நான் உன்மேல் பக்ஷமாக இருந்தால் நீ என்னை விரும்புவாய். நான் உன்மேல் குரூரமாயிருந்தால்.........

கோம : நாதா! அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? நீங்கள் என்மேல் எப்போதும் பக்ஷமாகவே இருப்பீர்கள். ஒரு போதும் குரூரமாயிருக்கமாட்டீர்கள். ஐயோ, நீங்கள் அப்படி இல்லையெனச் சொல்லுங்கள். எப்போதும் பக்ஷமாகவே இருப்போமெனச் சொல்லுங்கள்.

சுந் : என்ன கோமு! என்னைக் குறிப்பிட்டா நான் சொன்னேன். ஒரு புருஷன் ஒரு மனைவி எனும் நிலையில்தான் கேட்டேன்.

கோம : முதலில் 'நான் உன்மேல் எப்பவும் பக்ஷமாகவே இருப்பேன்' எனச் சொல்லுங்கள்.

சுந் : உம். நான்—என் கண்மணியாகிய உன்மேல் எப்பவும் பக்ஷமாகவே இருப்பேன். போதுமா? அது சரி; நான் கேட்ட கேள்விக்கு—?

கோம : புருஷன் மனைவியின்மேல் பக்ஷமாக இருந்தால் அவள் பூர்வ ஜன்ம பாக்கியவதி.

சுந் : குரூரமாயிருந்தால்—

கோம : அதுவும் அவள் செய்துகொண்ட பலாபலன்.

சுந் : பூர்வ ஜன்ம பலாபலன் ஒருபக்கமிருக்கட்டும். அப்படி நேரிட்டால் அந்தப் புருஷனிடம் அவள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?

கோம : எங்க அம்மா அடிக்கடி நல்ல கதைகளும், நல்ல புத்திமதிகளும் சொல்லுவார்கள். கணவனிடம் நான் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென அவர் சொன்னது சொல்லி எத்தனையோ வருஷமிருக்கும். என்றாலும் நேற்றுத்தான் சொன்ன மாதிரியே இருக்கிறது. ஒரு புருஷன், மனைவியின்மேல் பக்ஷமாக இருக்கலாம். கோபமாய் இருக்கலாம். மனைவி அதைப் பொருட்

படுத்தாமல் கணவனுக்குச் செய்யவேண்டிய தொண்டும், அவனுக்குரிய பக்தியும் கொஞ்சமும் குறையக்கூடாதெனச் சொல்லி இருக்கிறார். என் நாதா! அடித்தாலும் அணைத்தாலும் நீங்கள் தானே எங்கள் தெய்வம்.

சுந்: நல்ல பிரசங்கம் கோமு. நீ சொல்கிறபடி நடக்க முடியாது. அதிலும் குரூர புருஷனிடமும் மனைவி பக்தி குறையாமலிருக்கவேண்டுமென்பது சுத்தப் பைத்தியம்தான்.

கோம: என்னமோ நாதா! உத்தம மனைவிகள் அப்படித்தா னிருப்பார்கள். நாதா! இன்றைக்கு நீங்கள் போடும் கேள்வியைப் பார்க்க எனக்கே பயமாயிருக்கிறது. நீங்கள் எப்பவும் என்மேல் பக்ஷமாயிருக்கவேண்டும்.

சுந்: கண்மணி, உன் வாத்ஸல்யத்தையும் தர்க்க ஞானத்தையும் அறிய மிகவும் பெருமை அடைகிறேன். நான் ஒரு லோபி. நீ என்னுடைய நிறைந்த செல்வம். லோபிக்கு செல்வத்தின்மேல் பிரேமை குறையுமா?

[கோமதி வெற்றிலை மடித்துக் கொடுக்கிறாள்.]

சுந்: கோமு, வேதநாயகம் பிள்ளை கீர்த்தனை ஒன்று பாடு. கேட்டு ரொம்ப நாளாகிறது.

[கோமதி பாடுகிறாள். சிறிது நேரத்தில் காந்தாவும், கவி ராஜுவும் வருகிறார்கள். கோமதி எழுந்து உள்ளே செல்கிறாள்.]

சுந்: ஹலோ! மிஸ்டர் கவிராஜ், மிஸ். காந்தா!

[கைலாகு கொடுத்து நாற்காலியில் உட்காருகின்றனர்.]

சுந்: கோமு, காபி கொண்டுவா.

கவி: மிஸ்டர், எங்கள் மேரேஜுக்கு.

காந்தா: 27ந் தேதியில்தான். என்னுடைய காந்தா காட்டேஜில்தான் ரிஸப்ஷன் எல்லாம்.

[பத்திரிகை கொடுக்கிறான்.]

கவி: பத்திரிகை.........

[கோமதி காபியுடன் வருகிறாள்.]

காந்தா: O! May I know this lady?

சுந்: My wife.

காந்தா: Your wife! உங்கள் மனைவியா? ஏம்மா, இப்படி பயந்தாற்போலிருக்கிறீர்கள்? கம்பீரமாய் இருந்தாலல்லவா இனி பெண் சமுதாயம் முன்னேறும்.

[கோமதி திடுக்குற்று உள்ளே செல்கிருள்.]

சுந்: அவள் மிகவும் அடக்கமுடையவள்.

காந்தா: உங்களுடைய மனைவி இப்படி கிணற்றுத் தவளை போலிருப்பதைப் பார்க்க எனக்கே வெட்கமாயிருக்கிறது. மிஸ்டர் சுந்தரம் நீங்கள் உங்கள் மனைவிக்குக் கொஞ்சம் நாகரீகத்தைக் கற்பியுங்கள்.

கவி: Don't forget Mr. Sundaram. Functionக்கு கட்டாயம் attend பண்ணவேண்டும்.

[காந்தாவும், கவிராஜனும் கைகோர்த்துச் செல்லல். கோமதி பிரவேசம்.]

கோம: என் நாதா! இந்த அம்மாள் யார்? அவர் பேச்சைக் கேட்க என்னமோ மாதிரி இருக்கே. பெண்களுக்குரிய அடக்கம், ஒடுக்கம் கொஞ்சமுமில்லை!

சுந்: அவர்கள் இரண்டுபேரும் புதுப்பெண்ணும் மாப்பிள்ளையும். 27-ந் தேதியில் அவர்களுக்குக் கலியாணம். பார்த்தாயா!

கோம: கொடுமையடியம்மா கொடுமை! அது கிடக்கு; நீங்கள் காபி குடியுங்கள்.

## 5-வது சீன்

## காந்தா காட்டேஜ்

[விவாக ஆடம்பரம் — தம்பதிகளுக்கு பரிசுகள் வழங்கிஞர்கள் — பத்ரா பிரசங்கம்.]

நண்பர்களே !

இன்றைய marriage கொண்டாட்டம் மிகவும் சந்தோஷமாய் நடந்தேறியது. இதுவரை நமது சமூகத்தை அடிமைப்படுத்தி இருந்த, மூடப் பழக்க வழக்கங்கள் ஒழிக்கப்பட்டு ஒவ்வொருவரின் உரிமை—முக்கியமாய்ப் பெண்களின் சுதந்திரம், இவைகளை நன்குணர்ந்து அதற்கேற்ப என் குமாரி காந்தாவும், மிஸ்டர் கவிராஜுவும் வாழ்க்கை ஒப்பந்தம் செய்துகொண்டனர். இதுமாதிரி விழிப்பு நம் நாடு முழுதும் பாவி பெருமையடைய வேண்டுமென விரும்புகிறேன். எனது குமாரி காந்தாவும், மிஸ்டர் கவிராஜுவும் இதற்கு வழிகாட்டியாக இன்று நம் முன்னிருப்பதைக்காண மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். [கரகோஷம்.]

[கரகோஷத்தினிடையே காந்தா பிரசங்கம் செய்ய எழுந்து நிற்கிறாள்.]

கனவான்களே, சீமாட்டிகளே !

எல்லோருக்கும் வர்தனம். பெண்களைப் பாவைகளாக வைத்து ஆட்டிய காலம் இனி இல்லை. நாங்கள் எங்கள் உரிமையையும், நலத்தையும் காப்பாற்றிக்கொள்ளும் வகையை நன்கு அறிந்து கொண்டோம். மேல்நாட்டார் எங்களுடைய கண்களை நன்கு திறந்துவிட்டனர். ஒரு ஆணுக்கு என்னென்ன உரிமையுண்டோ அவை முழுவதும் பெண்களுக்கு உண்டு என்பதை இனி ஸ்தாபிப்போம். அடுப்பூதும் பெண்கள் என அலக்ஷியமாய் பேசிய காலம் இனி இல்லை. எங்கள் இனம் பலஹீனமானது என ஆண்கள் யாரும் மதித்துவிடலாகாது. அப்படி நினைப்பவர்கள் சரித்திரத்தைப் புரட்டிப் பார்க்கட்டும். ஜான்ஸி ராணி லெக்ஷிமி பாயின் வலிமை மிகுந்த சக்தியை ஞாபக மூட்டுகிறேன். மேல்நாட்டு ரமணிகள் ஜோன் ஆப் ஆர்க்கும், கிளியோபிட்ராவும் எங்கள் இனம் என்பதை எடுத்துக்காட்டுகிறேன். நானும் மிஸ்டர் கவிராஜுவும் இன்று வாழ்க்கை ஒப்பந்தம் செய்திருக்கிறோம். பெண் உரிமையை

நன்கு அறிந்திருக்கும் எதிர்கால யுவர்களின் பிரதிநிதியாக விளங்குகிறார் மிஸ்டர் கவிராஜ் எனக் கூற மிகவும் சந்தோஷமடைகிறேன். உங்கள் அனைவருக்கும் என் வாழ்க்கை நண்பர் மிஸ்டர் கவிராஜுவின் சார்பிலும் வந்தனம் செலுத்துகிறேன். [கரகோஷம்]

சுந்: ஓ! ரொம்ப நேரமாகிவிட்டது. கோமதி காத்துக் கொண்டிருப்பாள். மிஸ்டர் கவிராஜ் shall I take leave? மிஸ். காந்தா?

கவி & காந்தா: Yes! (கை குலுக்கி சுந்தரம் செல்கிறான்.)

[பழனி 'கோ'வெனக் கத்திக்கொண்டு வருதல்.]

பழனி. ஐயையோ அம்மா! செத்துல்ல போயிட்டாங்களாம்! [கத்துகிறான்]

எல்லோரும்: என்ன, என்ன?

[பழனி தந்திக் கடிதத்தைக் கொடுக்கிறான்.]

காந்தா: அடே! இது என்னடா? Marriage greetings அல்லவா! செத்தது யாருடா?

பழனி: தந்திக்காரர் கொடுத்து, அவர் செத்துப்போயிட்டாருனு சொன்னார். நம்ம சின்ன எஜமானர் அய்யா தங்கமானவருல்ல. போன வருஷம்தானே நல்ல உருட்டி எடுத்த காளை மாதிரி வந்திருந்தாரு.

காந்தா: போடா nonsense! என் சித்தப்பா தான் என்னை வாழ்த்தி தந்தி சொல்லியிருக்கிறார். ஒருத்தரும் சாகவில்லை. போடா!

[பழனி ஒரு பக்கமாய் நிற்கிறான். எல்லோரும் சிரிக்கின்றனர்.]

## 6-வது சீன்

## கோமதி - சுந்தரத்தை எதிர்பார்க்கிறாள்

கோம: எவ்வளவு நேரமாகிறது. (கோவில் மணி 11 அடிக்கிறது.) ஒண்ணு, ரெண்டு, மூணு, நாலு, அஞ்சு, ஆறு, ஏழு,

எட்டு, ஒன்பது, பத்து, பதினொண்ணு, பதினொரு மணி அடிச்சுடுச்சே. இன்னும் என் அத்தானைக் காணோம். இந்நேரமட்டும் சாப்பிட்டாரோ என்னவோ! சாதம் எல்லாம் தண்ணீர்விட்டுப் போயிருக்குமே! எங்கே போயிருப்பார். இன்னும் காணோமே.

[ஒரு பெண் போகிறாள்.]

பெண்: யார் கோமதியா?

கோம: யாரு ... செல்லம்மாவா?

பெண்: ஆமா, ஏன் இன்னேரமா வெளியே நிக்கிறே!

கோம: என் வீட்டுக்காரர் இன்னும் வரவில்லை. என்னமோ இன்னும் காணோம்......

பெண்: ஆம்பிள்ளைகள், போனால் வருகிறார்கள். அதற்காக இந்த ஊளைக்காற்றில் ஏன் முழுச்சுண்டிருக்கே. உள்ளே போய் படுபோ!

கோம: தூக்கம் வரவில்லை செல்லம். (அவள் செல்கிறாள்.) அதோ வருகிறாரே, அவர் யார்? 'ச்சோ' அவரில்லை. நான் என்ன செய்வேன்? இன்னும் காணவில்லையே. தேவி! நீ தான் துணை!

[சுந்தரம் வருகிறான்.]

கோம: நாதா! வந்துட்டீங்களா? ஏன் இவ்வளவு நாழிகை? எனக்கு என்னவோ பயமாய்ப் போச்சு. எப்பவாவது இப்படி வந்திருந்தேங்கனா, ஏதோ வருவீர்களென இருக்கலாம். எண்ணைக்குமில்லாமல் இண்ணைக்கு இந்தமாதிரி வந்தால் நான் என்ன நினைப்பது! தேவிதான் காப்பாற்றினாள்.

சுந்: போனால் வரமாட்டேனா! இதுக்காகவா இப்படி? அந்த marriageக்குப் போயிருந்தேன். நேரமாகிவிட்டது. வா, உள்ளே; ஊளைக்காற்றைப் பாரு. உடலை அப்படியே நடுக்குது. [உள்ளே செல்கிறார்கள்.]

## 7-வது சீன்

ஆபீஸுக்கு முன் கார் நிற்கிறது. அதில் காந்தாவும் பழனியும் இருக்கிருர்கள்.

காந்தா: மிஸ்டர் கவிராஜுவைக் கூட்டிவா!

[பழனி இறங்கி உள்ளே போகிருன்.]

காந்தா: போய் எவ்வளவு நேரமாகிறது? என்னை இப்படியா wait பண்ணச் செய்கிறது. என்ன இருந்தாலும் இந்த மனிதர்களுக்கு கண்யம், கௌரவம் ஒன்றும் கிடையாது. Play, fiveக்கு எல்லாம் ஆரம்பித்துவிடுவார்கள்.

[கவிராஜ் வேகமாய் முன்னும், பழனி பின்னும் வருகிருன்.]

கவி: ஹலோ! மிஸ். காந்தா!

காந்தா: நீங்கள் என்னை மிகவும் அகௌரவமாக நடத்துகிறீர்களென வருந்துகிறேன்.

கவி: என்ன செய்தேன் மிஸ். காந்தா?

காந்தா: எவ்வளவு நேரம் நான் wait பண்றது?

கவி: ஓ! மன்னித்துக்கொள்ளுங்கள். ஆபீஸில் ஒரு சிக்கலான வேலையில் அகப்பட்டுக்கொண்டு ரொம்ப trouble ஆயிருக்கு. நேரே play groundக்குப்போக வேண்டியதுதானே!

[கவிராஜ் காரில் ஏறுகிருன்.]

காந்தா: ஆமாம். பழனி, நீ காட்டேஜுக்குப் போ.

[கார் செல்கிறது.]

## 8-வது சீன்

### சுந்தரம் வீட்டின் உள்பகுதி

சுந்: கண்மணி கோமு! இன்றைக்குத்தான் உன் தேவியின் மகிமையைப் பார்க்கப் போகிறேன். இன்று டெனிஸ் final match நான் வெற்றியுடன் திரும்ப வேண்டும்.

கோம: ஆஹா, தேவி துணையிருக்கும்போது ஒரு குறையும் வராது நாதா!

சுந்: கோமு! உன்னுடைய தைரிய வார்த்தையையும், தேவியுடன் நீ நெருங்கி யிருக்கும் பக்தியையும் நினைக்கும்போது எனக்கே ஒரு புது சக்தி உண்டாகிறது. நான் வெற்றியடைவேன் என்பதில் சந்தேகமில்லை.

[நண்பர்கள் வெளியிலிருந்து கூப்பிடும் சப்தம்.]

ஓ! இதோ வந்துவிட்டேன். கோமு, நான் வரட்டுமா? [செல்கிறான்.]

[கோமதி தேவி படத்தின்முன் வணங்குகிறாள்.]

கோம: தேவி! உன் அடியார்; உன்னையே நம்பி இருக்கிறோம். என் நாதர் இன்று யாதொரு சிரமமில்லாமல் வெற்றியுடன் திரும்பிவர கிருபைசெய். அம்பாள் உன்னையே சரணடைகிறோம்.

## 9-வது சீன்

## வழி

[பந்தாட்டம் பார்த்து திரும்பிவரும் கூட்டம்.]

1வது: மிஸ்டர் சுந்தரத்தின் play இருக்கே ரொம்ப excellent அப்பா......அடடா!

2வது: பஞ்சாய்த்தான் பறக்கிறான். நல்ல champion.

3வது: சுந்தரம் இல்லாவிட்டால் அந்த பார்ட்டி எக்ஸ் பார்ட்டியாக வேண்டியதுதான். very excellent play. [பேசி செல்கின்றனர்.]

மைதானத்தில் சுந்தரத்திற்கு கைலாகு கொடுக்கிறார்கள். மாலைகள் குவிகின்றன. கவிராஜூவும், காந்தாவும் கைலாகு கொடுக்கின்றனர்.

காந்தா: conguratulation மிஸ்டர் சுந்தரம்—ரொம்ப excellent play. இதை நான் எப்பவும் மறக்கமுடியாது.

## 10வது சீன்

### சுந்தரம் வீடு

[கோமதி படத்தின் முன் கும்பிட்டுக்கொண்டிருக்கிருள்.]

கோம: தேவி! இந்நேரம் ஆட்டம் முடிந்திருக்கலாம். யார் ஜெயித்தனரோ? என் நாதரின் ஆசையையும் நிறைவேற்றி வைக்க வேண்டும்.

[சுந்தரம் பிரவேசம். கையிலிருந்த மாலையை கோமதியின் கழுத்தில் அவள் அறியாமல் போடுகிருன்.]

கோம: ஆ! யாரது?

சுந்: நான் தான் கோமு. வேறு யாருமில்லை. கோமு, இப்ப என்னை ரொம்ப லேசாய் நினைத்துவிடாதே. All India Champion தெரியுமா?

கோம: நாதா! தாங்கள் தானே ஜெயித்தது.

சுந்: உன்னுடைய தேவியின் அருளிருக்கும்போது தோல்வி வேரு? எனக்கே......எனக்குத்தான் பூரண வெற்றியும்.

கோம: (பெருமூச்சுடன்) ஸ்வாமி, வெற்றி கிடைத்ததா? [சந்தோஷமாய் பாடுகிருள்.]

கோம: நாதா! விளையாடி வந்ததால் மேல் கால் வலிக்குமே! வெந்நீர் தயாராய் வைத்திருக்கிறேன். ஸ்நானம் செய்யலாம் வாருங்கள்.

## 11வது சீன்

### நந்தவனம்

[காந்தா தனித்திருக்கிருள்.]

காந்தா: Moon light ரம்மியமாயிருக்கு. நந்தவனத்தில் பூக்கள் நிறைந்து அழகாய் அசைந்து ஆடுகின்றன. என் மனம்

என் அவைகளை நாடவில்லை! அவைகளை ரஸிக்கும் முறையில் என் புலன்கள் என் வேலை செய்யவில்லை! உஸ்! தூக்கமும் வரவில்லை. என்ன விஷம்போல் என் உடலை தாக்குகிறது. ஆம்! அந்த சௌந்தர்யமான முகம், வாளிப்பான உடல், உற்சாகமான விளையாட்டு; அவரைப் பார்த்ததிலிருந்து நான் நிம்மதி இழந்துவிட்டேன். மிஸ்டர் சுந்தரம்! நீர் எவ்வளவு உன்னதமானவர். ஆனால் உமது மனைவியோ, ஐயோ பொற் பாத்திரத்தில் சேற்றை வைத்திருப்பதுபோல் அல்லவா இருக்கிறது. உண்மையில் நீர் நினைத்துப் பாரும். என்னுடைய சௌந்தர்யமும் அம்சமும் அல்லவா உம்முடைய வாழ்க்கையில் பிணைக்கப்படவேண்டும். மிஸ்டர் சுந்தரம், உம்மை நான் விரும்புகிறேன். நான் கலவைச் சந்தணம். ஆனால் கவிராஜுபோன்ற அசட்டுப் பானையிலா நான் இருக்கவேண்டும்? என்னுடைய மூடத்தனம்தான்! மிஸ்டர் சுந்தரம் உம்மை நான் விரும்புகிறேன். அதற்காக நான் இந்த நள்ளிரவில் ஏங்குகிறேன்.

[கவிராஜ் வேகமாய் வருகிறான்.]

கவி: எங்கே காந்தாவை? படுக்கையிலிருந்தவளைக் காணவில்லை. இரவும் சாப்பாடு வேண்டாமென மறுத்துவிட்டாள். டம்ளரில் பாலும் அப்படியே இருக்கிறது. சரியானபடி என்னிடம் முகம் கொடுத்தும் பேசவில்லை. எங்கே அவள்? எங்கே போயிருப்பாள்? காந்தா! காந்தா!!

காந்தா: யார் அது? கவிராஜுவின் சப்தம் போலிருக்கிறது! என்ன சேதி?

[கவிராஜு எதிரே வருகிறான்.]

கவி: காந்தா! இந்நேரத்தில் இங்கு ஏன் தனிமையாக வந்திருக்கிறாய்? ராத்திரியும் சாப்பிடவில்லை.

காந்தா: பசி ஒன்றும் இல்லை. கொஞ்சம் தனிமையை விரும்புகிறேன். இப்ப நீங்கள் disturb செய்யாமலிருந்தால் ரொம்ப thanks உண்டு.

கவி: காரணம்...? என் முகம் வாடி இருக்கிறது?

காந்தா: இப்போது நான் யாருடனும் சம்பாஷிக்க விரும்பவில்லை.

கவி: உடம்புக்கு ஒன்றுமில்லையே!

காந்தா: இல்லை. தாங்கள் bed roomக்குப்போனால் நல்லது.

[கவிராஜ் செல்கிறான்.]

காந்தா: இந்த nonsense ஊடே வந்து என் உணர்ச்சியையும், அவாவையும் தடுக்க முயற்சிக்கிறான். Fool! நாளை நான் மிஸ்டர் சுந்தரத்தைச் சந்திக்க வேண்டும். ஆம்! அவருடைய வெற்றிக்காக ஒரு டீ பார்ட்டி arrange செய்தால் முடிகிறது.

## 12-வது சீன்

### சுந்தரம் வீட்டு முன் கார் வந்து நிற்கிறது. காந்தா இறங்கி வருகிறாள்

காந்தா: வீட்டில் யார் இருப்பது? மிஸ்டர் சுந்தரம் இருக்கிறாரா?

கோம: யார்...? வாங்கம்மா வாங்க.

[நாற்காலி எடுத்துப்போட, காந்தா அமர்கிறாள்.]

காந்தா: மிஸ்டர் சுந்தரம் இருக்கிறாரா? அவரைக் காண வேண்டும்.

கோம: (திடுக்கிட்டு) அவுகளையா? வெளியே போயிருக்கிறார். என்ன சேதியம்மா?

காந்தா: ஒன்றுமில்லை. நேற்று அவர் டென்னிஸ் விளையாடியதைப் பார்க்க மிகவும் அதிசயமாயிருந்தது. எனக்கு ரொம்ப சந்தோஷம். அதற்காக ஒரு டீ பார்ட்டி நடத்தி அவரை கௌரவிக்க வேண்டுமென விரும்புகிறேன்.

கோம: அம்மா, என் மணவாளரின் பெருமையைக் கேட்க மிகவும் பூரிக்கிறேன். நான் பெரிய பாக்கியசாலி. ஆனால் தாங்கள்

ஒரு பெண் தானே. என்ன இருந்தாலும் என் நாயகர் தங்களுக்கு அன்னியர்தானே! அவரை தாங்கள் தங்கள் புருஷர் துணையில்லாமல் இப்படி தனித்து வந்து அழைப்பதைப் பார்க்க எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

காந்தா: என்ன? என்னை மிகவும் அவமதித்துவிட்டாயே! நான் மனுஷி இல்லையா? பகுத்தறிவு எனக்குக் கிடையாதா? உன்போன்ற மூடப்பேதைகளும், அநாகரீக புருட்ஸ்களும் இருந்துதானே பெண் சமுதாயத்தை இவ்வளவு கேவலத்துக்குக் கொண்டு வந்திருக்கிறீர்கள். நான் என் விருப்பப்படி நடப்பதில் என் husbandன் தலையீடு என்ன வேண்டியிருக்கிறது?

கோம: அம்மா, நான் மனதில் ஒன்றும் வாக்கில் ஒன்றும் வைத்துக்கொள்ள விரும்பவில்லை. தாங்கள் கணவனை இப்படி அலக்ஷியப்படுத்தி பேசுவதைப் பார்க்க எனக்கென்னமோ பயமாயிருக்கிறது.

காந்தா: உன்னைப்போன்று நான் அவ்வளவு foolish lady அல்ல. நான் நிறம்ப படித்தவள். காலேஜ்வரையும் எட்டிப் பார்த்துவிட்டேன். சைக்காலஜி நன்கு பயின்றவள். எனக்கு யாரும் புத்தி சொல்ல வேண்டியதில்லை என நினைக்கிறேன். மிஸ்டர் சுந்தரத்தை இப்போது சந்திக்க விரும்புகிறேன். என் புருஷனிடத்தில் நான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதில் கவலைப்பட வேண்டாம்.

கோம: கோபித்துக்கொள்ளாதீர்கள் அம்மா! அவர் வந்தவுடன் நீங்கள் வந்து போனதைச் சொல்லுகிறேன்.

காந்தா: அவர் வரும்வரை நான் waitபண்ணியிருக்கலாகாதோ!

கோம: எப்போது வருவார் என்பது நிச்சயமில்லை. அதனால்தான் அப்படிச் சொன்னேன்.

காந்தா: சரி நான் அவரை சந்திக்கிறேன். [எழுந்து செல்கிறாள்.]

உம், பார்க்கிறேன்; இந்த புருஷனை இவள் விட்டுப் பிரியாததை.........

கோம: ஐயோ, இவளைப் பார்க்க எனக்கு பயமாயிருக்கிறதே! இவள் என்ன செய்வாளோ! கொண்ட கணவனை இழிவாகப் பேசுகிருள். அந்நிய புருஷனை சந்திக்கத் தனித்து வந்து அவரை வாயாரப் புகழ்கிருள். ஏ தெய்வமே! இது பெரும் பயங்கரச் சுழலாயிருக்கிறதே! எங்களை அதில் சிக்கவிடாமல் காப்பாற்று.

## 13-வது சீன்

## வழி

[காந்தா காட்டேஜுக்கு அருகில் காந்தா, சுந்தரத்தைச்சந்திக்கிருள்.]

காந்தா: ஹல்லோ மிஸ்டர் சுந்தரம்! just now தங்கள் வீட்டுக்குத்தான் போய் வருகிறேன்.

சுந்: Madam, என்ன matter?

காந்தா: Come on! காட்டேஜுக்கு வாருங்கள். பேசலாம்.

[இருவரும் மாளிகையினுள் நுழைகின்றனர். காந்தா ஆசனம் போடுகிருள்.]

காந்தா: அடே பழனி! காபி கொண்டு வா.

[எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்து]

மிஸ்டர் சுந்தரம்! நேற்று நீங்கள் டென்னீஸ் play பண்ணினீங்களே, most wonderful. I was immensely pleased.

சுந்: கடவுள் அனுக்கிரகம்.

[காபி வருகிறது]

காந்தா: மிஸ்டர்! சாப்பிடுங்கள்.

சுந்: Thanks.

[சுந்தரம் குடிக்கிருன்.]

[காந்தா ரேடியோவைத் திருப்பி பாட்டுக்கு ஏற்ப கால் தாளம் போடுகிருள்.]

காந்தா: மிஸ்டர் சுந்தரம், very nice song. Is it not?

சுந்: ஆஹா! மிகவும் அருமையான சங்கீதம்.

[காந்தா சிகரெட் கொடுக்க, சுந்தரம் வேண்டா வெறுப்புடன் புகைக்கிருன்.]

காந்தா: மிஸ்டர், உங்கள் நிகரற்ற திறமையை நான் மிகவும் மெச்சுகிறேன். தங்களை கௌரவிக்க நாளை ஒரு பார்டி நடத்த விரும்புகிறேன். நீங்கள் சம்மதிக்கவேண்டும்.

சுந்: அடடா! அதற்கு என்ன? தாங்கள் இவ்வளவு அபிமானமாயிருப்பதே போதாதா? இதைக்காட்டிலும் விருந்து என்ன வேண்டும்.

காந்தா: அப்படியல்ல மிஸ்டர். தங்களுக்கு அவ்விதம் தோன்றினுலும் எங்களுக்குத் திருப்தி வேண்டாமா?

[ரேடியோ பாடலுக்கேற்ப காலடிகளைவைத்துக்கொண்டு கதவை தாழிடுகிருள்.]

காந்தா: மிஸ்டர் சுந்தரம்! I don't like to hide it. உண்மையில் நான் அதை மறைக்க விரும்பவில்லை. நீங்கள் மிகவும் உன்னதமானவர். அதற்கேற்ப உங்களுக்குச் சரியான நல்ல educated wife கிடைக்கவில்லை என மிகவும் வருந்துகிறேன்.

சுந்: அதனுலென்ன?

காந்தா: அதனுலென்ன! அது இருக்கட்டும். நான் தங்களை காதலிக்கிறேன் எனச் சொல்வதில் எனக்கு வெட்கமில்லை. I love you very much?

சுந்: காந்தா, இது என்ன? ஐயோ வேண்டாம்! நீயோ மிஸ்டர் கவிராஜுவின் மனைவி. நானும் கலியாணமானவன். என்னை காதலிப்பது சரியல்ல.

[காந்தா அவனுடைய இரு கரங்களையும் எட்டிப் பிடிக்கிருள்.]

காந்தா: மிஸ்டர், என் விருப்பத்தை கவிராஜ் தடைசெய்ய முடியாது. தாங்கள் என்னையும் என் ஆசையையும் கௌரவப் படுத்த வேண்டும்.

சுந்: காந்தா, தயவுசெய்து கையை விடுங்கள். நீங்கள் நினைப்பதும் விரும்புவதும் சரியல்ல.

காந்தா: மிஸ்டர் சுந்தரம், நீங்கள் எத்தகைய வார்த்தையாலும், வெறுப்பான பேச்சினாலும் என்னைத் திருப்பமுடியாது. என் விருப்பத்தைப் பூர்த்திசெய்யுங்கள்.

Sweets with sweets was not,
Joy delights in joy,
Why lovist thou that which
Receivest not gladly.

மிஸ்டர் சுந்தரம், என் மனம் நிம்மதியடையுமா? (அவனுடைய கரங்களினூடே நெருங்குகிறாள்.)

சுந்: என்னால் மீற முடியவில்லை. காந்தா, உன்னுடைய கண்கள் பளிங்குபோல் பிரகாசிக்கின்றனவே.

[இருவரும் முத்தம் கொடுக்கப்போகின்றனர். கதவு தட்டும் சப்தம் கேட்கிறது.]

சப்தம்: "யார்? காந்தா! please open the door."

[திடுக்கிட்டுப் பிரிகின்றனர்.]

காந்தா: யார்? அனுவசியமான தொந்தரவு கொடுப்பது?

பதில்: நான்தான் கவிராஜ்! கதவைத் திற......

[சுந்தரம் சோபாவில் உட்கார்ந்து காபி கிளாஸை வாயில் வைத்து நடிக்கிறான். காந்தா உடையைச் சரிப்படுத்திக்கொண்டு கதவைத் திறக்கிறாள். கவிராஜ் பிரவேசம்.]

கவி: யார்? மிஸ்டர் சுந்தரமா? ஹலோ! ஹலோ!

சுந்: ஹலோ! (இருவரும் கை குலுக்குகின்றனர்.)

காந்தா: இந்த நேரத்தில் சனியன் எங்கிருந்து வந்தது? வெளியே delay இல்லாமல் அனுப்பிவிட வேண்டும். மிஸ்டர் கவிராஜ், எங்கிருந்து வருகிறீர்?

கவி: ஹார்பரில் கொஞ்சம் அலுவல் இருந்தது. இப்போது தான் அங்கிருந்து வருகிறேன்.

காந்தா: ஆபீஸுக்குப் போகவில்லையா? கிளார்க்குகளுக்குள் சச்சரவு ஏற்பட்டிருக்கிறதாம். நீங்கள் கவனிப்பதில்லையா?

கவி: சச்சரவா? எனக்குத் தெரியாதே!

காந்தா: அதை விசாரித்து ஆர்டர் உண்டாக்குங்கள். சீக்கிரம் புறப்பட்டால் நல்லது.

கவி: Yes. மிஸ்டர் சுந்தரம், நான் வருகிறேன்.

சுந்: நல்லது.

[கவிராஜ் வெளியே வருகிறான். உள்ளே காந்தா கதவைச் சாத்தி தாழிடுகிறாள். கவிராஜ் தயங்கி விடுகிறான்.]

கவி: நேற்றுமுதல் காந்தா வித்தியாசமாய் காணப்படுகிறாள். என்னை வெளியேற்றியதும் கதவை இப்படி அடைப்பானேன். என்ன நடக்கிறதென மறைந்திருந்து பார்ப்போம்.

[ஜன்னல் வழியே பார்க்கிறான்.]

காந்தா: மிஸ்டர், மன்னித்துக் கொள்ளுங்கள். அந்த மனுஷன் ஊடே வந்துவிட்டான். என்றாலும், எவ்வளவு தந்திரமாய் கடத்திவிட்டேன் பார்த்தீர்களா! வாருங்கள்.

[சுந்தரத்தின் கையைப்பற்றி இழுக்கிறாள். சுந்தரம் நெருங்குகிறான். கவிராஜ் கோபமாய் கதவை ஓங்கி தாக்குகிறான்.]

கவி: என்ன கொடுமை! Horrible sight. ஏ காந்தா! கதவைத் திற! ஏ! நம்பிக்கைத் துரோக காந்தா......உம், கதவைத் திற!

[காந்தாவும், சுந்தரமும் திடுக்குற்று விடுகின்றனர். காந்தாவுக்குக் கோபம் எழுகிறது.]

காந்தா: ஏன் இந்த மாதிரி முரட்டுத்தனமாய் நடக்க வேண்டும்?

கவி: கதவைத் திற. (ஓங்கி மிதிக்கிறான்.) [காந்தா திறக்கிறாள்.]

காந்தா: ஏன் இந்த மாதிரி! இப்படி நடப்பது உங்களுக்கு தகுதியில்லை...

கவி: என்னடி செய்யத் துணிந்தாய்? என்னை ஏமாற்றி வெளியே அனுப்பிவிட்டு நீ விபசாரமா......

காந்தா: விபசாரம்...நான் செய்கிறேனா? அப்படியானால் அது என் உரிமை. அதை நீர் தடுக்கமுடியாது.

கவி: உன் உரிமையா? அடி சண்டாளி! காமாந்தகாரப் பிசாசே! உன் பைசாச உரிமையை நான் காண்கிறேன்.

காந்தா: இந்த மாதிரி எல்லாம் நீர் பேச அனுமதிக்க முடியாது.

கவி. என்ன? உன்னை என்ன செய்கிறேன் பார்.

[ஓங்கி அடிக்க முயல்கிறான். சுந்தரம் தடுக்கிறான். கவிராஜ் அவனுடைய 'டை'யைப் பிடித்து கன்னத்தில் அறைய, அவன் குனிந்துகொள்ள, அந்த அறை காந்தாவின் கன்னத்தில் விழுகிறது.]

காந்தா: ஆ! அடே முட்டாள், என்னை அடிக்கவா துணிந்தாய்! கழுதை வெளியே போடா. ஒரு விநாடியும் இங்கு தாமதிக்கக்கூடாது. என்னுடைய விருப்பப்படி நான் நடப்பதில் நீ யார் தடுக்க? என் போக்கு உனக்குப் பிடித்தமில்லாவிட்டால் நீ பிரிந்துபோக வேண்டியதுதானே! உன்னை அடிக்கவா சொல்விற்று. இன்றிருந்து என்னிடம் எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளவேண்டாம். இதோ உன் உடுப்புப் பெட்டி......

[உடுப்புப்பெட்டி, வாக்கிங் ஸ்டிக் முதலியவற்றை எடுத்தெறிகிறாள்.]

சுந் : கவிராஜ், உன்னுடைய இந்த மூர்க்கத்தனமான செய்கைக்கு இந்த இடத்திலேயே பதில் கொடுக்கமுடியும். ஆனால்......

காந்தா : Get out. உம் போ வெளியே!

கவி : ஆ! ஏமாந்தேன். சுந்தரம் நான் செய்வது மூடத்தனமா, நீ செய்வது மூடத்தனமா, என்பதை நினைத்துப் பார்.

காந்தா : மிஸ்டர் சுந்தரம், இந்த மிருகத்திடம் பேச்சு வேண்டாம். நீ இனி தாமதிக்கக்கூடாது.

கவி : மிருகமா...! [கையைமடித்து நெருங்குகிறான். சுந்தரம் அதற்குத் தயாராக, கவிராஜ் அடங்கி தலை குனிந்து வெளியேறுகிறான். அவனுடைய சாமான்கள் வெளியே எறியப்படுகின்றன.]

காந்தா : மிஸ்டர் சுந்தரம், இந்த முட்டாளுடைய செய்கையால் நீங்கள் வருத்தமடையமாட்டீர்களென நம்புகிறேன்.

சுந் : உங்களுடைய கன்னம் எப்படி இருக்கிறது?

## 14-வது சீன்

## வழி

கவி : என்ன கொடுமை! நான் மோசம் போனேன். நாகரீகமெனவும் பெண்கள் சுதந்திரமெனவும், அவள் மனம்போனபடி நடக்க அனுமதித்ததற்கு நல்ல பலன்! என்னை துரோகித்து பிறன்மேல் இச்சைப்பட்டதுமல்லாமல், அது தன் உரிமை எனவும் பேசுகிறாள். இனி நான் நிமிர்ந்து பார்ப்பதற்கும் அருகதை இல்லை. சுந்தரம், நீ இவ்விதம் அற்பபுத்தி படைத்தவனென நான் கனவிலும் நினைக்கவில்லை. என் மனைவியை நீ அபகரித்ததுமட்டுமல்லாது என்னை மூடனெனவும் கூறத் துணிந்தாய். நான்மூடனா? இரு, உன் மனைவியையும் நான் அபகரித்து இதே வார்த்தையை உன்னையும் கேட்காமல் விடுவேனா? இப்போது நேராக காந்தாவின் அப்பாவிடம்போய் இதைச் சொல்லிப் பார்ப்போம்.

## 15-வது சீன்
## ஆபீஸ் அறை

[பத்ரா வீற்றிருக்கிறார். கவிராஜ் பிரவேசம்.]

பத்ரா: என்ன மிஸ்டர் கவிராஜ்? மிகவும் சோர்ந்து காணப்படுகிறீர்!

கவி: ஒன்றுமில்லே.

பத்ரா: ஒருமாதிரியாகத் தெரிகிறது!

கவி: நான் நாசமாக்கப்பட்டேன் மாமா! இனி நான் தலே தூக்கி நடக்கவும் தகுதி இல்லாமல் காந்தா செய்துவிட்டாள்.

பத்ரா: என்ன?...காந்தா......

கவி: அவள் என்னே துரோகித்து சுந்தரத்தின்மேல் ஆசை கொண்டிருக்கிருள். இதை என் கண்களால் கண்டேன்.

பத்ரா: யார்? டென்னிஸ் சேம்பியன் சுந்தரமா?

கவி: ஆமாம்......

[காந்தா பிரவேசம்]

பத்ரா: வா, காந்தா. என்ன கண்கள் சிவந்து கன்னம் எல்லாம் ஒரு மாதிரி......

காந்தா: அப்பா, இந்த மனுஷன் என்னே மிகவும் அகௌரவப்படுத்திவிட்டார். மிஸ்டர். சுந்தரத்தின் முன் என்னே கேவலப்படுத்தியது மட்டுமில்லே. என் கன்னத்திலும் ஓங்கி அறைந்து ரொம்ப கேவலமாக நடந்துகொண்டார். இனி ஒரு விநாடியும் இந்த மனுஷனேடு சேர்ந்து இருக்கமுடியாது.

பத்ரா: அடியா? கன்னத்திலா அடித்தார்! கவிராஜ், நீர் இந்தமாதிரி செய்வீரென நான் எதிர்பார்க்கவில்லே.

கவி: அவள் என்னே துரோகிக்கும்போது ஆத்திரம் உண்டாகாதா?

பத்ரா: ரொம்ப ஒழுங்கு. அதற்கு அடிப்பதா? முட்டாள் தனம். இந்த நாகரீக உலகில்...இப்படியா? உமக்கு அவளே பிடித்த மில்லாவிட்டால் கௌரவமாக divorce செய்துகொள்ள வேண்டியதுதானே. அதை விட்டுவிட்டு......

காந்தா: நாளையே நான் விவாகரத்து செய்துகொள்ள வேண்டும் அப்பா!

கவி: நான் பேச விரும்பவில்லை. நான் வருகிறேன்.

[செல்கிறான்.]

காந்தா: அப்பா இந்த மூடன் இப்படிச் செய்வான் என கொஞ்சமும் நான் எதிர்பார்க்கவில்லை. மிஸ்டர் சுந்தரம் எவ்வளவு நல்ல வாலிபர். அவருக்கும் இந்த மனுஷனுக்கும் எவ்வளவு வித்தியாசம்? எனக்கு மிஸ்டர் சுந்தரத்தின் நட்புக் கிடைத்தது ரொம்ப லக்கிச்சான்ஸ் அப்பா!

பத்ரா: அப்படியா? நானும் அவரை All Indian's Champian எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். நாளை இவனுடைய சம்பந்தத்தை வெட்டிவிடு.

காந்தா: உங்களைப்போன்ற தந்தை யாருக்குத்தான் கிடைக்கும்! உண்மையில் நான் ஒரு பாக்கியவதி.

[கவிராஜ் வெளிவருகிறான். ஒரு பிச்சைக்காரன் நவநாகரீகக் கொடுமையை உணர்த்தி இனியேனும் விழித்துக்கொள்ளும்படி பொருள் நிறைந்த பாடல் பாடிச் செல்கிறான்.]'

## 16-வது சீன்

## சுந்தரம் வீட்டுவாசல்

[அதே பிச்சைக்காரன் பாடி வருகிறான். இளமையிலும் ஏய்த்திடும் அழகிலும் மயங்கிவிடாமல் உஷாராயிருக்கும் பொருள் நிறைந்த பாடல் பாடிச் செல்லல். சுந்தரம் வீட்டுப் படியில் நின்று ஆழ்ந்த யோசனையிலிருக்கிறான். உள்ளிருந்து கோமதி வருகிறாள்]

கோம: நாதா! இன்னும் பசி இல்லையா? பத்து மணி ஆகிறதே! கொஞ்சம் சாப்பிட வாருங்கள்.

சுந்: (கடுமையாக) உஷ். பசி இல்லேன்னு போவேன். தொண தொணன்னு வந்து ஆளை அலட்றயே.

கோம: நான் என்ன சொல்கிறேன். சாப்பாடு வேண்டாமா? பசி எடுக்காவிட்டாலும் ஒரு கை சாதமாவது பால் ஊற்றிச் சாப்பிட்டால்தான் என் மனம் நிம்மதியாகும்.

சுந்: உன் நிம்மதிக்கு என் வயிற்றைக் கெடுத்துக்கொள்ள சொல்கிறாயாக்கும்.

கோம: ஐயோ, இன்று தங்களைப் பார்க்க எனக்கு ரொம்ப பயமாயிருக்கிறது. மிகவும் ஆழ்ந்த யோசனையிலிருக்கிறீங்களே!

சுந்: அந்த அசட்டுக் கேள்வியை விட்டுட்டு உள்ளேபோய் சோத்துக்கும் தண்ணியை ஊற்றிட்டுப் படு போ. என்னை அலட்டாதே!

[கோமதி பயத்துடன் சென்று தேவியின் படத்தின் முன் கைகுவித்து வணங்குகிறாள்.]

சுந்: என்ன மிருதுவான பார்வை! ஆஹா! காந்தாவைப் போன்ற ஒரு நாரிமணி கிடைப்பதெனில் சாத்தியமா!

[கார் வந்து நிற்கிறது. காந்தா உற்சாகமாய் வருகிறாள்.]

சுந்: யார் காந்தாவா! Comeon Comeon!! (கை குலுக்கி வரவேற்கிறான்.)

காந்தா: அப்பாவும் அந்த மிருகத்தை divorce செய்ய சம்மதித்துவிட்டார். வாருங்கள் நம் காட்டேஜுக்குப் போகலாம்.

[கோமதி வந்து திடுக்குறுகிறாள். சுந்தரம் வாயில் விரலை வைத்து காந்தாவுக்கு சாடைசெய்கிறான்.]

சுந்: அடடா! என்ன அவசர ஜோலி! ரொம்ப அவசியமா? அந்த ஆபீஸ் விஷயம்தானே! இப்பவே வரவேண்டுமா?

காந்தா: ஆமாம், ரொம்ப important அல்லவா!

சுந்: அப்படியானால் இதோ புறப்படுகிறேன்.

கோம: இந்நேரத்தில் எங்கே நாதா! நாளைக் காலையில்...

சுந்: உஸ் மூடம். செய்யப்போகிறதை தடுக்காதே தடுக்காதே என, எத்தனை தடவை சொல்வது. ஒரு காரியத்திநிமித்தம் போவதில் எந்த நேரம்தான் கணக்கு!

கோம : அம்மா !

காந்தா : நீங்கள் அப்பொழுதே என்னை அதட்டிவிட்டீர்கள். நான் உங்களுடன் பேசக்கூடாது !

சுந் : காந்தா, புறப்படலாமா ?

கோம : நாதா......

சுந் : ஜோலி முடிந்ததும் உடனே கூட திரும்பிவிடலாம்.

[கார் செல்கிறது. கோமதி கண்ணீருடன் அந்த திசையை பார்த்து நிற்கிருள்.]

கோம : என் வாழ்க்கையைக் கெடுக்க அந்த பாவி தோன்றி விட்டாள். ஐயோ இனி என் கதி? ஏ தேவி! நான் உனக்கு என்ன குற்றம் செய்தேன் ? என் பிராணனை அபகரித்தாற்போல் செய்துவிட்டாயே! காலையில் அவள் வந்து பேசியதையும் நடக்கும் மாதிரியையும் பார்க்க எனக்குப் பயமாயிருக்கிறதே! அவருக்கு ஒருவித இன்னலும் ஏற்படாமல் தேவி, நீயே காக்கவேண்டும். (அந்த இடத்திலேயே நிற்கிருள். விடிந்து சேவல் கூவுகிறது.)

ஐயோ, உடனே திரும்பி வருகிறேன் எனப் போனவரை இன்னும் காணவில்லையே. காக்கையும் கத்துகிறது. விடிந்து விட்டது. இன்னும் காணேமே! நாதா, நான் உங்களுக்கு என்ன குற்றம் செய்தேன் ? என்னை மறக்கும்படியுமா ஏற்பட்டது! தங்களைப் பிரிந்து நான் எப்படி தனித்திருப்பேன். ஐயோ இன்னும் காணேமே! அவர் போன இடம் தெரிந்தாலாவது பார்த்து வரலாமே! எந்த இடம்......எனக்குக்கூட தெரியலியே! ஒரு வேளை அந்த கலியாணப் பத்திரிகையிலாவது அவளுடைய வீட்டு விலாசம் இருக்குமா ? பார்ப்போம். (உள்ளே செல்லல்.)

[திரும்பவும் பத்திரிகையுடன் வருகை]

ஆமாம்! காந்தா காட்டேஜ் மேற்கு தெரு.

[கதவைச் சாத்திவிட்டு வேகமாக செல்கிருள்.]

## 17-வது சீன்

## காந்தா காட்டேஜ்

[பழனி bed காபி கொண்டு வருகிறான். படுக்கையில் சுந்தரமும், காந்தாவும் படுத்திருக்கின்றனர்.]

பழனி: யார்? ஆள் புதுசா இருக்கே! பழையவர் இல்லே போலிருக்கே!......அம்மா! அம்மா!! Bed காபி!

[ஒரு ஸ்டூல்மேல் வைக்கிறான். காந்தாவும், சுந்தரமும் எழுந்திருக்கிறார்கள்.]

பழனி: அம்மா, ஐயா இல்லிங்களா? இவர் ஏன் இங்கே படுத்திருக்கிறார்? அவருடைய வீட்டில் அவுங்க அம்மா இல்லிங்களா? அவுக தேடுவாங்களா இல்லேயா?

காந்தா: சீ! Idiot. என்னடா அனுவசியமாய் உளருகிறே!

பழனி: இடியாப்பத்தின்மேல் பிரியமா? உடனே குசினிக்காரியிடம் சொல்லி தயார்செய்து விடுகிறேன்.

காந்தா: அடே செவிடு! இனி இந்த மாதிரி உளரக்கூடாது. இவரை மிகவும் மரியாதையாக நடத்தவேண்டும்.

பழனி: நான் உளருகிறேனு? போங்கம்மா போங்க, அப்படித் தப்புத்தண்டாவா நடக்கமாட்டேன்.

[பழனி செல்கிறான். சுந்தரமும், காந்தாவும் காபி குடிக்கின்றனர்.]

காந்தா: உலகில் ரோஜாவைப் படைத்து முள்ளேயும் படைத்திருப்பதுபோல் நம்போன்றவர் மத்தியில் அந்த அசடும்...

சுந்: ஆம், இந்த நேரத்தில் உங்கள் கர்லிங் ஹேருக்கும், முகத்தின் தேஜஸுக்கும் ரொம்ப அழகாகக் காணப்படுகிறீர்.

[கோமதி பிரவேசம். பழனியை சந்திக்கிறாள்.]

கோம: அய்யா, காந்தா காட்டேஜ் இதுதானே!

பழனி: என்ன! என்ன!!

கோம: காந்தா காட்டேஜ்!

பழனி : கொஞ்சம் இரைந்து.........

கோம : காந்தா காட்டேஜ்.........

பழனி : இன்னம்.........

கோம : (கல்யாண பத்திரிகையில் காந்தா எனும் பெயரை காட்டுகிருள்.)

பழனி : ஆமா, ஆமா! அம்மாளைப் பார்க்கணுமா? அவுங்க பெட்ரூமில் இருப்பாக. கொஞ்சம் இப்படியே இருங்க. வந்துடு வாங்க.

[பழனி செல்கிருன். கோமதி எட்டிப் பார்க்கிருள். படுக்கை யறையிலிருந்து படுக்கை உடையுடன் சுந்தரமும், காந்தாவும் வெளியே வருவதைப் பார்த்து திடுக்கிடுகிருள்.]

கோம : நாதா!

சுந் : யார், கோமதியா?

[கோபமாய் பார்க்கிருன். கோமதி எதிரே பிரமித்து நிற் கிருள். கண்ணீர் வடிகிறது.]

சுந் : எங்கே வந்தாய்? இப்படி தனியாக எங்கே வந்தாய்?

கோம : ராத்திரி முழுவதும் வந்துவிடுவீர்களென எதிர் பார்த்திருந்தேன். காணும். விடிந்ததும் என்னுல் நிம்மதியாக இருக்கமுடியவில்லை. என் நாதா! அடியாளை மறந்து இப்படி இருக்கலாமா?

காந்தா : உங்களை என்னமும் செய்து விடுவார்களோவென பயம் போலும்!

கோம : என் மனம் நிம்மதியாகவில்லையம்மா!

சுந் : வாயை மூடு கழுதை! (கன்னத்தில் அறைகிருன்.) இங்கு எப்படி நீ தனியாக வரத் துணிந்தாய். போனவனுக்கு வரத் தெரியாதோ! உருக்கத்தோடு தேடி வந்து விட்டாள். போடி வெளியே!

[கோமதி கன்னத்தை தடவிக்கொண்டு கண்ணீர் வடிய தேம்பு கிறான். வெளியே பிச்சைக்காரன் அந்த மூவரின் மனோநிலையை பிரதிபலித்து பாடுகிறான்.]

சுந் : போ......வீட்டுக்கு.

[கோமதி தேம்பிக்கொண்டு செல்கிறாள்.]

காந்தா : பேதை, இவள்தானா மிஸ்டர் சுந்தரத்தைக் காப் பாற்றுபவள்!

சுந் : அவள் போகிறாள். நாம் போகலாம் காந்தா!

காந்தா : டிரஸ் மாற்றிக்கொள்ளுவோம் வாருங்கள்.

## 18-வது சீன்

## சுந்தரத்தின் வீடு

கோம : நாதா, நான் என்ன குற்றம் செய்தேன்? தாங்கள் தான் என் உயிரும் உடலும் தங்களைவிட்டு எனக்கு இந்த உலகில் வேறு என்ன இருக்கிறது? நாம் இருவரும் அனுபவிக்கும் ஆனந் தம் இந்த பூலோகத்தில் யாருக்கு உண்டு என வாய் குளிரச்சொல்லி என்னைப் பெருமைப்படுத்திய என் பிராணபதி, இப்போது என் ஆசையிலும், நம்பிக்கையிலும் இடிவிழச் செய்து விட்டீர்களே! சாமி! நான் அறிய தங்களுக்கு ஒரு குறையும் செய்யவில்லையே! ஆமாம், அந்த பைசாசம் தங்களை என் பந்தத்திலிருந்து பிரித்து விட்டது. காந்தா, அடி காந்தா! உன்னைப்போல் நானும் ஒரு பெண்தானே! இருந்து இருந்து என் வாயில் தானா மண்ணை அள்ளிப்போட துணிந்தாய்.

[சுந்தரம் வருகிறான். கோமதி ஆவலாய் எதிர் ஓடி]

கோம : நாதா, நான் என்ன குற்றம் செய்தேன்? எனக்கு இந்த மாதிரி தண்டனை!

சுந் : உம், யார் துணையுமின்றி அங்கு நீ எப்படி வரலாம். உனக்கு அவ்வளவு துணிவா?

கோம: நாதா! பெண்களுக்கு தங்கள் புருஷனைத் தவிர்த்து பாத்தியமானவை வேறு என்ன இருக்கிறது! என் செல்வம் பிறர் ஒருத்தியால் அபகரிக்கப்படும்போது என்னால் எப்படி சகிக்க முடியும்?

சுந்: இன்னொருத்தியைப்பற்றி கேவலமாய் பேசாதே.

கோம: அவளை ஏன் நான் கேவலமாய்ப் பேசவேண்டும்? அவளை நான் பார்த்ததிலிருந்து எனக்கு என்னமோ பயமாயிருந்தது. அதுபோலவே நடந்துவிட்டது. நாதா! வேறு என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். என்னை கண்டம் துண்டமாய் வெட்டுங்கள். நான் புன்சிரிப்புடன் தழுவுகிறேன். ஆனால் இந்த மாதிரியான தண்டனைமட்டும் கொடுக்காதீர்கள். என்னால் அதை சகிக்கமுடியவில்லை.

சுந்: (கலங்குகிறான். அதை பலவந்தமாய் மாற்றி) என்னடி உளறுகிறாய்? நீ ஏன் தனியாக வந்தாய் என்றால்......

கோம: என்னை மன்னியுங்கள்.

சுந்: மன்னியுங்கள்......சீ......மூடம் (தலை மயிற்றைப் பிடித்துக்கொண்டு முகத்தில் அறைகிறான்.)

கோம: ஐயோ......!

சுந்: நான் காந்தாவை அடைந்திருப்பதில் உனக்கு அவ்வளவு பொறாமையா?

கோம: அத்தான்! உலகத்தில் என்னைப்போன்ற அழகி வேறு ஒருவரும் இல்லை என்றீர்களே? நான் மகா பாக்கியவதி எனப் பெருமைப்படுத்தினீர்களே அதை நினைத்துப் பாருங்கள். நான் துர்ப்பாக்கியவதி தானா! சாமி! நீங்கள் என்னைத்தண்டியுங்கள். நான் அதற்காக வருந்தவில்லை. எனக்கு நிம்மதிதான் வேண்டும்.

சுந்: ஏண்டி, நீ இந்த மாதிரி அழுது கத்தி அடுத்த வீட்டுப் பெண்டுகளை கூட்டம்போட்டு என்னை அவமானப்படுத்தவா நினைக்கிறாய்...... (அறைகிறான்.)

கோம: ஐயோ, நானு அவமானத்தை உண்டாக்குபவள்!

சுந்: கள்ளி...பசப்புகிறுள்...(சுந்தரம் அடிக்கிறுன்.)

## 19-வது சீன்

### சுந்தரம் வீடு

கோம: ஐயோ, நான் என்ன செய்வேன்? ஊரில் பலபேர் பலவிதமாகவல்லவா என் புருஷனை ஏசுகிறுர்கள். என் அப்பாவையும் அம்மாவையும் இப்போ தரவழைக்கலாமா? உம், கூடாது. அதுவேறு அவமானம். ஐயோ, அவர் என்மேல் எவ்வளவு அன்பு படைத்தவர். எவ்வளவ பிரியமாய் நடத்தியவர்! இந்தச் சமயம் அந்த நிர்மூளி ஏதோ மருந்துவைத்து மயக்கிவிட்டாள். அந்த மயக்கம்தானே அவரை இந்தமாதிரி மாறுதல் உண்டாக்கி என்னை வெறுக்கும்படி செய்திருக்கிறது. அவர் வெறுத்தால் என்ன? நான் அவரை தப்பித்தவறியேனும் ஒரு வார்த்தையும் ஆத்திரத்தில் சொல்லக்கூடாது. எப்படிப்போனுலும் அவருக்கு தீங்கு ஏற்படாம லிருந்தால்மட்டும் போதும். அதற்காக நான் தேவியைப் பிரார்த்தித்துக்கொண்டிருப்பதுதான் என் கடமை. தேவி! என் பிராண பதிக்கு எந்தவிதமான தீங்கும் சம்பவிக்காதபடி காப்பாற்று. அம்மா...தாயே நீதான் தஞ்சம். ஐயோ நான் அவரிடம் வார்த்தையாடியதில் ஆத்திரத்தில் எந்தெந்த மாதிரி பேசினேனே! அவர் மனம் எப்படிப் புண்பட்டதோ! ஆமாம், இதோ ஒரு கடித மூலமாக் அவரிடம் மன்னிப்புக் கேட்கிறேன்.

[எழுத உட்காருகிறுள். கண்ணீர் வடிகிறது. எழுத்து ஓடவில்லை.]

ஐயோ, நான் உயிரோடிருக்க, என் செல்வத்தை பிறர் அபகரிக்க எப்படித்தான் மனமொத்து சம்மதிப்பேன். என் மனம் இடம்தரவில்லையே! நாதா......... (எழுதுகிறுள்.)

[வாசிக்கிறுள்]

அடியாள் கோமதி, தங்கள் பொற்பாத கமலங்களைப் பூஜித்து எழுதும் விண்ணப்பம். நான் ஏதோ ஆத்திரத்தாலும் மதியீனத் தாலும் தங்கள் மனதைப் புண்படுத்திவிட்டேன். இனி ஒரு போதும் அம்மாதிரி செய்யவேமாட்டேன். என்னை மன்னித்து ஆசீர்வதியுங்கள். தங்கள் அன்பும் ஆதரவும்தான் என் பொக்கிஷம்; அதுவே போதும்.

தங்கள் அடியாள்,

கோமதி.

ஸ்வாமி மன நிம்மதிக்கு என் நாயகரைச் சொல்லி என்ன செய்வது? குல ஸ்திரீகளுக்கு தன் உயிரை எமன் கையில் ஒப்பு விப்பதைத் தவிற வேறு என்ன வழி இருக்கிறது? கடைசியில் எமன் நமக்கு நிம்மதி தருவான்.

[கோமதி கடிதத்தைக்கொண்டுபோகிருள். கவிராஜ் பிரவேசம]

கவி: காந்தாவா அவள்! காட்டேறி! பிடாரி! அவளுடைய உண்மை சொரூபம் தெரிந்தது. இது நாகரீகமா, இது பெண்கள் உரிமையா? ஐயோ மூடத்தனமாய் அந்தப்படுகுழியில் விழுந்தேன். சுந்தரம், உன் உம்மத்தம், என் வாழ்க்கையிலா குறுக்கிட வேண் டும்? என் மனைவியை அபகரித்தது மட்டுமில்லை. என்னையும் அவமதித்தாய். உம், இதற்கு பழிவாங்காமல் விடுவேனு? உன் மனைவியுடன் நான் கைகோர்த்து உன் முன்னுல் வருகிறேனு இல்லையா? பார். அப்போது யார் யாரை மூடனென்பது தெரிந்துபோகும். அதோ.....கோமதி வீட்டினுள் செல்கிருள்.

[கவிராஜும் பின் தொடர்கிருன்.]

கோம: யார்? என்ன சமாச்சாரம்?

கவி: அம்மா, மிஸ்டர் சுந்தரம் இருக்கிருரா!

கோம: வெளியே போயிருக்காங்க.

கவி: அம்மா, தங்களிடம் ஒரு சேதி சொல்ல விருப்பம்.

கோம: என்னிடம் சொல்லவேண்டியது ஒன்னும் இருக்காதே!

கவி: கொஞ்சம் கேளுங்கள்.

கோம: அப்படி இருந்தாலும் அதை என் நாயகரிடம் சொன்னால் போதும்.

கவி: அம்மா, சொல்லவிடாமல் தடுக்கிறீர்களே! தங்கள் புருஷன் என் மனைவியை அபகரித்து என்னை அவமானப் படுத்தி விட்டார். இதை நான் யாரிடம் முறையிடுவது?

கோம: ஐயா, அவரைப்பற்றிக் குறைவாக என்னிடம் பேசவேண்டாம். யார் அபகரித்தது என்பது உம்முடைய மனைவியையே போய்க் கேளுங்கள். என் உயிராக இருந்த என் மாணிக்கத்தை அவள் அபகரித்து என்னை அவமதித்துவிட்டாள். அப்படி இருக்க, அந்த பழியை என் பதியின்மேல் சுமத்துவது சரியல்ல.

கவி: ஏம்மா? அவர் இங்கே வருவது உண்டா? நான் அப்படி நம்பவில்லை. உங்களிடம் ஒரு சேதி. ஆமாம்; அம்மா நீங்கள் கோபித்துக்கொள்ளவேண்டாம். அந்த மனுஷன் ரொம்ப கெட்டுப்போனர். தங்களை துரோகித்து இந்தமாதிரி அக்ரமம் செய்யும் அந்த மனுஷனுக்குச் சரியான புத்தி கற்பிக்கவேண்டும். இதோ வாருங்கள். நான் அவனிலும் எந்தவகையிலும் குறைந்தவனல்ல. நானும் நீங்களும்.........

கோம: சிவ, சிவா! ஏ மூடனே, இந்த மாதிரி பேச உனக்கு என்ன துணிவு! போம் வெளியே. ஐயோ, என் குடியைக் கெடுத்ததுமில்லாமல் என்னையுமா கெடுக்கத் துணிந்தீர்.

கவி: இந்தமாதிரி ஆத்திரப்படுவதில் என்ன பிரயோசனம்? ஆழ்ந்து யோசித்துப் பார்.

கோம: உடனே போகிறீரா, சப்தம்போட்டு ஆட்களைக் கூப்பிடவா!

கவி: நான் போகிறேம்மா. நீ நன்ருய் யோசித்துப் பார். வருகிறேன். (செல்கிருன்)

கோம: ஆ! ஐயோ! தெய்வமே! என்னை இம்மாதிரி அவமானப்படுத்தவுமா நினைத்தாய். குலப் பெண்கள் கொண்ட புருஷனைத்தவிற பிறரை கண்ணெடுத்தும் பார்க்கக்கூடாதே! நான் இந்தமாதிரி ஒருவன் சொல்லக் கேட்கும்படி ஆனதே! எ தெய்வமே!......இன்னும் என் நாதரைக் காணேமே!......

## 20-வது சீன்

## காந்தா காட்டேஜ்

[காந்தா சாப்பிடுகிருள்.]

காந்தா: அடே பழனி! சூப்பில் உப்பு கம்ப்ளீட்டாய் இல்லே.

பழனி: அதென்னம்மா அப்படிச் சொல்றீங்க. நானே நேரில்போய் நல்ல வெள்ளாட்டங் காலாய்ப் பார்த்து வாங்கி வந்துல்ல தயாரித்திருக்கிறேன்.

காந்தா: ஐயோ, இந்த செவிட்டோடு பேசுவதற்குள் தொண்டை காய்ந்துவிடும். அடே, சால்ட்!

பழனி: இன்னொரு பிளேட்டா?

காந்தா: (விரல்களினுல் சைகை காட்டுகிருள்.)

பழனி: உப்பா?......உம்......அதுவா? (உப்புக் கொண்டு வந்து) இந்தாங்க, சாப்பிடுங்கள்.

காந்தா: உஸ், கச்சுக்கிடக்கே! ரொம்பக் கொட்டிட் டாயே! இந்த செவிட்டு முண்டத்தோடு நல்லா இருக்கு. சூப் பைக் கெடுத்திட்டாயே!

[தபால்காரனின் சப்தம். பழனி கடிதம் வாங்கிவருகிருன்.]

காந்தா: அது என்ன? (வாங்கி உடைத்து வாசித்து) அடே மன்னிப்பு லெட்டரா? என்ன உருக்கம்! உம், உன் புருஷன்! உன் உயிர். உன் பொக்கிஷமோ அவர். இன்னும் அவருடைய ஆதரவைத் தேடுகிருயோ? வீண் கனவு. அடி

கோமதி! இனி அவரை நினைக்காதே! அவர் என்னருமைப் பொருளாகிவிட்டார். நான் இனி ஒரு க்ஷணமும் விடமாட்டேன். நீ பேதை இந்தப் புருஷன் உனக்குச் சரியில்லை என்றால் வேறு ஒருவனை மணந்து நிம்மதியாகயிருப்பாயா, அதைவிடுத்து இவரே இவர் வேண்டுமென்று.........பைத்தியம். ஆமாம், ஒருவேளை மிஸ்டர் சுந்தரம் மனம் மாறி அவளிடம் போனால் என்னசெய்வது? அதற்குள் இவரை அவள் வெறுக்கும்படி செய்துவிடவேண்டும். இனி அவர்களை ஒருங்குசேர விடலாகாது. அதற்கு என்ன செய்வது? ஆமாம், அவளை எனக்கு குசினிக்காரியாக்கி கொடுமையாக நடத்துவோம். அதில் அவள் வெறுப்படைந்து ஒருவேளை ஓடிவிடலாம். அதுதான் சரியான யோசனை.

[கடிதத்தைக் கிழித்து எறிந்து] மிஸ்டர் சுந்தரம் எங்கே?

## 21-வது சீன்

## காந்தா காட்டேஜின் ஒரு பகுதி

சுந்: ஆம், நான் தவறுசெய்துவிட்டேன். கோமதி, என் ஆசை மாணிக்கமாய் இருந்தவளை இன்று வெறுத்துவிட்டேன். அவளுடைய இளம் தளிர்போன்ற முகமும் மிருதுவான அங்கமும் இன்று எனக்குக் காடுமுரடாக மாறிவிட்டது. அவள் நினைப்பது சரி! அவளுக்கு நான் தவறுசெய்துவிட்டேன். உண்மை! நான் தவறு செய்துவிட்டேன். அவளை ஏன் நான் வெறுக்கவேண்டும்? ஏ கோமு: நான் படுகுழியில் விழுந்துவிட்டேன். ஆனந்த மிகுதியால் பூரித்து உன் மேனியை என் கைகளால் தடவி மகிழ்ந்திருப்பதைத் தவிற இதற்கு முன் எப்போதுதான் இப்படி இம்சித்திருக்கிறேன். ஏ கோமு! என்னை மன்னிக்கமாட்டாயா? யார் அது கூப்பிடுவது? ஆ, காந்தாவா! என்ன காந்தா! அடடா! பால்போன்ற முகம். காந்தா உன் அழகிய மேனி, ததும்புகிற யௌவனம், உன்போன்ற சுந்தரவதனி யார் உண்டு? காந்தா உன்னை நான் அடைய மகா பாக்கியம் செய்தவனாவேன். நீ என்

காங்களைப் பற்றும்போதும், என் முகத்தை, உன் பிரகாசமான கண்களுடன், அடடா என் ஆனந்தம் வேறுயாருக்குத்தான் கிடைக்கும்? உன்னை அடைந்துவிடுவதில் வேறு எவ்வித தனத்தையும் சம்பத்தையும் இழக்கும்படி நேரிட்டாலும் நான் பொருட்படுத்த மாட்டேன். ஆமா, கோமதியா? அவளுடைய அவலெக்ஷண ரூபத்திற்கும், உன்னுடைய அருள் பொலியும் முகத்திற்கும், கொஞ்சமேனும் பொருத்தமுண்டா? வேண்டாம், அவள்......... அவளைப்பற்றி எனக்கென்ன? காந்தா, நீ என் உற்சாகத்தைப் பெருக்குகிறாய். என் உள்ளத்தை நிறப்புகிறாய். நான் பாக்கியவான்.

[காந்தா பிரவேசம்]

ஹலோ காந்தா! ஹலோ.

காந்தா: மிஸ்டர் சுந்தரம்.

[இருவரும் சோபாவில் உட்காருகிறார்கள்.]

காந்தா: மிஸ்டர் சுந்தரம், கூடியசீக்கிரம் ஒரு ஆல் இன்டிய டூர் புறப்படலாமென நினைக்கிறேன். நம் உல்லாஸ வாழ்க்கை இந்த டவுனிலேயே இருப்பதுடன் போதாது. பெரிய மௌண்டன்களிலும் வாட்டர் பால்ஸ்களின் பக்கத்திலும் உற்சாகமாய்..... என் மிஸ்டர், life is only for living, why not we enjoy?

சுந்: ஆஹா! நன்றாகச் செய்யலாம். அதற்கென்ன? எங்கெங்கு விரும்புகிறோமோ அங்கெல்லாம் புறப்படலாம்.

காந்தா: என் மிஸ்டர் சுந்தரம், நாம் எவ்வளவு நல்ல ஜோடி. நாம் இருவரும் மௌன்டன்களின்மேல் திரியும்போது பார்ப்பவர்கள் நம்மை ஏஞ்சல்ஸ் எனக்கூட நினைத்துவிடுவார்கள் அல்லவா!

சுந்: Quite true; இருவரும் நிச்சயமாய் நினைப்பார்கள். காந்தா, நாம் மான் கூட்டமாதிரி உல்லாஸமாய்த் திரியவேண்டும்.

[பழனி இரு கிளாஸில் சூப் கொண்டுவருகிறான்.]

பழனி: அம்மா, அப்ப ரொம்ப உப்புப் போட்டுட்டேன் கச்சுக் கிடந்தது, இப்ப சாப்பிட்டுப் பாருங்கள் - ரொம்ப சரி! சாப்பிடுங்கள்.

காந்தா: (தட்டிவிட்டு) போடா வெளியே, எங்கள் அந்தரங்கப் பேச்சைக் கெடுத்துவிட்டாயே fool.

[பழனி செல்கிருன்]

சுந்: அவன் சூப்பில் உப்பு சாஸ்தியாய் போட்டுவிட்டாஞ?

காந்தா: ஆமாம், மூடம்! சமையலுக்குத்தான் சரியான ஆள் இல்லே. இவனேடு தொந்தரவாக இருக்கிறது.

சுந்: வேறு யாரையும்........?

காந்தா: வேறுயாரைத்தான் கொண்டுவருவது? இதுவரை எத்தனேயோபேர் — எல்லாம் இப்படித்தான். இந்த மூடங்களேக் கொண்டு உங்களுக்குச் சமையல் செய்து போடுவது எனக்குக் கொஞ்சமும் திருப்தி இல்லே.

சுந்: உம்.

காந்தா. மிஸ்டர் சுந்தரம், உங்கள் மனேவி எப்படி? சமையல் நன்ருகச் செய்வாரா? அப்படியாஞல் ஏன் வேருருவரைத் தேடவேண்டும். வெண்ணேயை கையில் வைத்துக் கொண்டு நெய்யுக்கு அலேயனுமா? உங்கள் wifeயே தரவழையுங்களேன்!

சுந்: உங்கள் இஷ்டம் அதுவாஞல் என்ன பிரமாதம்! இப்பவே கூட்டிவரச் செய்வோம். அடே பழனி!

[பழனி பிரவேசம்]

பழனி: என்னேக் கூப்பிட்டீங்களா?

சுந்: பேஞவும் லெட்டர்பேடும் எடுத்துவா சீக்கிரம். (பழனி செல்கிருன்) காந்தா, நீ நினேத்தது ரொம்ப சரி. அவளேயே கொண்டுவந்து சமையலுக்கு வைத்துக்கொள்வோம். விருப்பப்படி கவனித்துச் செய்வாள்.

காந்தா: Many thanks.

[பழனி சிகரெட் குழாயைக் கொண்டுவருகிருன்]

சுந்: இதையா எடுத்துவரச் சொன்னேன். எழுதுவதற்கு பேஞவும், லெட்டரும்.

பழனி: சர்பத்துங்களா? ரெண்டு கிளாஸா!

சுந்: உஸ், இந்த deaf வோடு கத்துவதற்குள் நாமே போய் எடுத்து வந்துவிடலாம்.

[போய் எடுத்து எழுதி கவரில் அடைத்துக் கொடுக்கிறான்]

சுந்: போய் நான் கூப்பிட்டதாக சீக்கிரம் கூட்டிவா!

பழனி: யாரைக் கூட்டியாரங்க.

காந்தா: அட இடியட், விலாசத்தைப் பார். தொலை soon.

[பழனி செல்கிறான்.]

## 22-வது சீன்

## வழி

கவி: அடி காந்தா, அந்தக் கோமதியும் உன்னைப்போல் ஒரு பெண்தானே. அவள்மட்டும் என் அவ்வளவு உறுதியாக, புருஷன்மேல் அவ்வளவு பக்தியாக இருக்கிறாள். சுந்தரம் அவளை எவ்வளவோ கொடுமை செய்தும் அவள் அவன்மேல் கொஞ்சமேனும் வெறுப்படைந்திருக்கிறாளா? என்னை அந்நிய புருஷர் என கண்ணெடுத்தும் பார்க்க மறுத்துவிட்டாளே! நீமட்டும் என் என்னை துரோகித்தாய்! நான் உன் மனம்போனபடி எல்லாம் சம்மதித்து, உன் இச்சையில் ஒரு பொழுதும் குறுக்கிடாமல் இருந்தேனே! என்னை நீ......ஆம், நான் இடம் கொடுத்தவன். மனைவியின் நலத்தை விரும்பினவன். அவளுடைய சுதந்திரத்தை வற்புறுத்தினவன். எனக்கு இந்த கதி! சுந்தரம், அந்தக் கோமதியை நான் வசப்படுத்தி உன்னை தலையை கீழே போடும்படி செய்யாமல் விடுவேனா! கோமதி உன் உறுதியையும், புருஷன் மேல் பக்தியையும் பார்க்கிறேன்.

[பழனி பிரவேசம்]

யார் பழனியா? பழனி!

பழனி: (கதறுகிறான்) ஆ, அய்யா, நீங்க இப்படி வந்துட்டேங்களே! அவர்களைப் பார்த்தால் என்ன கொண்டாட்டம்! அடடா!

கவி: பழனி, அதெதற்கென்னப்பா! சரி, அந்தச் சண்டாளி பேச்சை எடுக்காதே; நீ சௌக்கியம்தானே!

பழனி: இருக்கேங்க உங்களைப் பார்க்க.........

கவி: நீ எங்கே வேகமாய் போகிறாய்?

பழனி: நானா! என்ன சொன்னீங்க?

கவி: (சைகை மூலம்) எங்கே போறே!

பழனி: இந்த கடிதாசியை கொடுத்துவரப் போறேன். இப்ப என்னை அவுக படுத்தறபாடு.........அப்பாட, என்னால் சகிக்கலே!

கவி: (அந்தக் கடிதத்தைப் பார்த்து) ஓ ஹோ! யார் அதுவா! என்ன விசேஷம்? இருக்கட்டும் பழனி; வா ஹோட்டலுக்குப் போய் கொஞ்சம் காபி சாப்பிட்டு வருவோம்.

பழனி: என்னாங்க?

கவி: (சைகை) கொஞ்சம் காபி!

பழனி: வேண்டாங்க, உங்களைப் பார்க்கிறப்ப என் வயிறே பற்றி எறியுது.

கவி: பழனி, வா போவோம்.

பழனி: இந்த கடிதாசியைக் கொடுக்கணுங்களே!

கவி: இதையா? வா, ஒரு ஆளிடம் கொடுத்துவிட்டால் போகிறது.

பழனி: (ஒருவாறு சம்மதித்து) உங்க சொல்லைத் தட்டக் கூடாது (செல்கின்றனர்)

கவி: அந்த லெட்டரைக் கொடு (பழனி கொடுக்கிறான். கவிராஜ் வாசிக்கிறான்.)

கோல்டன் ஆப்பர்சூனிட்டி, சரி!

[ஒருவன் வருகிறான்]

கவி: ஓ boy!

பையன்: எஜமான்......

கவி: இந்த லெட்டரை இந்த அட்ரஸ்படி சேர்த்து...... (காதோடு ரகசியமாய் சொல்கிறான். பையன் சம்மதித்துச் செல்கிறான்.)

கவி: வாப்பா, கிளப்புக்குப் போவோம். ஓ boy மறந்துடாதே!

பையன்: உங்கள் ரூமுக்குத்தானே!

கவி: ஆமாம் சீக்கிரம்.

## 23-வது சீன்

## கவிராஜுவின் அறை

கவி: விருந்துக்கு வந்தவன் என் மனைவியை வசப்படுத்திக் கொண்டான். அடி கோமதி! நீ தப்பமுடியுமா? உன் உறுதி நிலக்குமா? இனி உன்னை என்னுடைய ஆசைநாயகியாக்காமல் விட்டுவிடுவேனு? கடவுள் நல்ல சந்தர்ப்பம் கொடுத்தார். பார்க்கலாம் வருகிறார்களாவென! அட இன்னும் காணுமே! போய் எவ்வளவு நேரமாகிறது? இன்னம்.........அதோ அவர்களா? இல்லை. ச்சு! யாரது? ஆம். அவர்கள்தான். நான் மறைந்து இருந்து உடனே கதவைத் தாழிட்டுக்கொள்ளவேண்டும்.

[கோமதியும், பையனும் பிரவேசம்.]

பையன்: அம்மா, இங்கேதாம்மா இருக்கிறார்!

கோம: இங்கேயா என் நாதர் இருக்கிறார்?

பையன்: ஆமாம்மா! உள்ளே இருக்கிறார். (கோமதி உள்ளே செல்கிறாள்.)

கோம: எங்கே அவர்? காணவில்லை! நாதா, நாதா! இங்குதானு என்னைக்கூட்டிவரச் சொன்னார்?

பையன்: ஒருவேளை வெளியே போயிருப்பார். இந்தா நான் போய்ப் பார்த்து கூட்டி வருகிறேன். (செல்கிறான்)

கோம: சீக்கிரமாய். நான் சந்தேகப்படவேண்டியதில்லை. என் நாயகரின் கையெழுத்துதானே......நிச்சயமாய் அவருடைய

எழுத்துத்தான். ஆ, என்ன! வாசற்கதவு அடைக்கிறது. (ஓடு கிருள். கவிராஜ் எதிரே வருகிருன்.) ஆ! ஐயோ மோசம் போனேன்!

கவி: நீ ஒன்றும் மோசம் போகவில்லை. உன்னுடைய நலத்தையும், மேன்மையையும் உத்தேசித்தே இங்கு வந்திருக்கிருய். இன்னும், ஒரு மனிதன் ஒரு ஸ்திரீ, இவர்களுடைய self-respect இன்னதென நீ தெரியாமலிருக்கிருய். நான் அதை உனக்குச் சொல்லியாக வேண்டும்.

கோம: ஐயா! இது என்ன? நான் கனவு காண்கிறேனு? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! எனக்குப் போக வழி விடுங்கள்.

கவி: உம், போவது இருக்கட்டும். உன்னை அந்த மூடன் வஞ்சித்தானே...அவனை நீ வஞ்சிப்பதில் உனக்கு ஒரு தவறும் வராது. அவனை நினைத்தும் அவனுக்காக மனம் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பதிலும்...இதோ என்னைப் பார்! நான் அவனிலும் எந்த அம்சத்தில் குறைந்தவன்? ரொம்ப சொகுசாக வாழலாம். யோசனையே வேண்டாம். இசைந்துவிடு.

கோம: சிவ, சிவா! இந்த மாதிரி நீர் சொல்வது உமக்கே அழகாய் இருக்கிறதா? ஒரு பெண்ணை, ஒரு குல ஸ்திரீயை வஞ்சகமாய் கொண்டு வந்து நாக்கில் நரம்பில்லாமல் உளருகிறீரே! இது உம்முடைய கேடுகாலத்தின் அறிகுறி என எச்சரிக்கிறேன். உம்முடைய தலைமுதல் உச்சிவரை மோக விஷம் முட்டி இருக்கிறது. நியாயக் கண்களை அது மறைத்திருக்கிறது. நிதானித்து அந்நிய ஸ்திரீகளிடம் மரியாதையாக நடந்துகொள்ளும்.

கவி: உன் எச்சரிக்கை எல்லாம் ஒரு பக்கமிருக்கட்டும். நீ எந்தமாதிரி துடியாக இருந்தாலும் இந்த இடத்தைவிட்டுத் தப்ப முடியாது? என்ன சொல்கிருய்?

கோம: ஐயா, நான் ஒரு பத்னி. என் புருஷனை தெய்வமாகக் கொண்டாடுபவள். என்னுடைய சக்தி எனக்குத் தெரியும். என்னுடைய மனத்தைக் கொதிப்படையச்செய்ய வேண்டாம்.

நீர் அழிந்து போவீர். சீதை ஒரு தனிப் பெண். அவளைக் கெடுக்கத் துணிந்த அந்த ராவணன் எக்கதியானான்? அவனுடைய சாம்ராஜ்யம் எக்கதியடைந்தது. நினைத்துப்பாரும். தமயந்தியை மானபங்கம் செய்ய நினைத்த அந்த வேடனின் கதியை மறந்துவிடாதீர். தனியாக இருக்கிறேனென நெருங்கிவிட வேண்டாம்! கற்புடைய பெண்கள் மழையையும் வருஷிக்கலாமென வள்ளுவர் சொன்ன வார்த்தையை ஞாபகமூட்டுகிறேன். சூரியனையே மறைத்தவள் ஒரு பத்னி நளாயினி! சர்வத்தையும் படைத்து, காத்து, அழிக்கும் மூவர்களையும் சிறு குழந்தைகளாக்கியது ஒரு பத்னி அனுசூயாவென்பதை மறக்காதீர். எங்கள் பத்னி வம்சத்திற்கு அந்த சக்தி இருக்கிறது. எங்கள் கற்பு எங்களைக் காக்கும். நான் தனிமையாக இருப்பதாக நீர் நினைக்கிறீரா? என் கற்பு எனக்கு உறுதுணையாக இருக்கிறது. அது என் கவசம். மோகத்தினால் மதி மயங்கி இருக்கிறீர். கொஞ்சம் நிதானியுங்கள்.

கவி: ஓ அதெல்லாம் இப்பச் சொன்னாயே, அதுவெல்லாம் பழைய குப்பை. இந்த 20th செஞ்ச்சரியில் அதுவெல்லாம் எடுக்காது. உன் நியாயத்தை ஒருபக்கம் சுருட்டிவைத்துவிடு. உன் புருஷன்—ஒருத்தியோடு ஒருவனாக இருந்துவாழ வேண்டிய அந்தப் புருஷன்—உன்னை வஞ்சித்தான் என்பதை ஞாபகப்படுத்துகிறேன். நீ அவனை பழி வாங்காவிட்டால் பெண் சமுதாயம் இன்னும் சாய்ந்துபோகும். கோமதி, உன் நியாய புத்தியை இன்னும் வளர்த்தாதே!

கோம: எங்கள் நலத்தை நீர் பேசுவது வேடிக்கையாக இருக்கிறது. ஆட்டுக்கு ஆபத்து வந்ததைப் பார்த்து ஓநாய் உருகியது மாதிரிதான். எட்டிநில். என் மணவாளன் என்னை வஞ்சிக்கலாம். என்னை கைப்பொம்மையாக ஆட்டலாம். வதைக்கலாம். என் புருஷன் எப்படி இருக்கிறார், எப்படி நடத்துகிறாரென்பதல்ல. என் கடமை அவருடைய நடத்தையில் குறை கண்டுபிடித்து வாதிப்பதல்ல. நான் அவர் பத்னி. அவரிடம் நீங்காத பக்தியாக இருந்து தொண்டாற்றுவதே என் கடமை.

கவி: உன் நியாயம், என்னை மாற்ருது கோமதி!

கோம: ஆ, என்னை நெருங்குகிருயா! ஐயோ!

கவி: ஆம், என் மனைவியை உன் புருஷன் கவர்ந்தான். உன்னை நான்......

கோம: தங்கள் மனைவியை கவர்ந்தார் என்பதற்காகவா என்னை? அண்ணு...உங்களை அண்ணு என அழைக்கிறேன். தயவுசெய்து தள்ளி நில்லுங்கள். என் புருஷன் அவ்விதம் செய்தார் என்பதற்காக நான் என்ன செய்வேன்? தயவுசெய்து நிதானித்துப் பாருங்கள். என் புருஷர் தங்கள் மனைவியைக் கவரும் போது அவள் ஏன் இடம் கொடுக்கவேண்டும்! அதனுலல்லவா இவ்வளவு விபரீதமும்! தன் கற்பை புனிதமாக கருதாமல் தவறி விட்ட அந்தப் பெண்ணுக்காக என்னை ஏன் தாங்கள் வஞ்சிக்க வேண்டும்! அண்ணு, உடம்பு வெறும் சதையாலும் எலும்பாலும் ஆனவைதானே! இன்று இளமையோடு இருக்கலாம். மிகவும் அழகோடு மின்னலாம், என்ருலும் ஒரு சமயம் அப்படியே அழகு மங்கி இளமை மறைந்து கடைசியாக மண்ணுக்கு இறையாக வேண்டியதுதானே! ஆனுல் அந்த தசை நரம்புகளால் ஆக்கப்பட்ட இந்த சடலம் சலனமாகி காரியம் செய்யும்படி செய்யும் சக்தி ஒன்றிருக்கிறதே அதன் மகத்துவத்தை நினைத்துப்பாருங்கள்! இன்று நீங்கள் இவ்வளவு தவிப்பதற்கு என் உடல்—வெறும் ஊன் நிறைந்த இந்த மேனி என்ன பிரமாதம்! ஆனுல் என் கடமை, என்னுடைய மானம், இவை என்றும் நிலைத்தவை. இவைக் காப்பாற்றப்படவேண்டும். அண்ணு! உங்கள் மனைவி ஏதோ வஞ்சித்து விட்டாள் என நீங்கள் நினைத்துத்தானே இவ்விதம் ஆத்திரப் படுகிறீர்கள். அவள் கடமையில் மீறிவிட்டாள் என்பதற்காகத் தானே இத்தனை துடிப்பு. அதே கடமையையும் வழியையும் மீறும்படி என்னை தூண்டுவது நியாயமா? அண்ணு! கொஞ்சம் நினைத்துப்பாருங்கள். உலகில் தெய்வீகம் ஒவ்வொருவருக்கும் உண்டு.

அதைக்கொண்டு கண்ணியப்படுத்தியும், தான் செய்யவேண்டிய கடமையையும் சரிவர நடத்தினல் அதுவே தெய்வத்திற்குச் செய்யும் தொண்டு அல்லவா! அண்ணு! என் மணவாளன் என்னை வெறுக்கிருர் என்பதல்ல. என்னை நேசிக்கிருர் என்பதல்ல. அதை எதிர்பார்ப்பதல்ல என் கடமை. அவரிடம் நீங்காத பக்தியாயிருந்து, அவருக்குத் தொண்டுசெய்வதே என் கடமையாகும். அண்ணு! இப்போது என் கற்பைக் காப்பதில் எனக்கு வரும் கஷ்டங்களும் நஷ்டங்களும் நான் எதிர்பார்ப்பதல்ல. நான் அதை காக்கவேண்டும். மறுபடியும் அண்ணு, அண்ணுவென அழைக்கிறேன். அண்ணு, என் கற்பைக்காக்க வழி எனக்குத் தெரியும். உடனே உங்கள் முன் ஒரு நொடியில் பிணமாகிவிடுவேன். ஆனல் நீங்கள் ஆத்திரத்தினலும் மோஹ இருளாலும் நிலை குலைந்து இருக்கிறீர்கள் என்பதற்காகவே நீர் திருந்தவேண்டுமென இவ்வளவுநேரம் பேசுகிறேன். முடிவுசெய்யுங்கள். என் பிணத்தைக் காண விரும்புகிறீரா? அல்லது.........

கவி: [கோமதியின் பேச்சின்போது உணர்ச்சி ஏற்பட்டு மாறிவிடுகிருன். கண்ணீர் வடிய]

ஆம், அத்தனையும் நியாயம். பெண்கள் படிப்பற்றவர்கள்; காந்தா போன்ற பெண்களே சர்வத்தையும் கற்று அறிந்தவர்கள் என்று நினைத்திருந்தேன். இன்று உண்மையை காண்கிறேன். காந்தா கற்றது பெண்களுக்குரிய படிப்பல்ல. அவள் தன்னை ராக்ஷச வாழ்க்கைக்கு தயார்படுத்தி இருக்கிருள். இந்தப் பெண்ணும் படித்துத்தான் இருக்கிருள். ஆஹா! எத்தனை அருமையான ஞானம்! எவ்வளவு ஆழ்ந்த கவனிப்பு! அம்மா தெய்வீகம் என்பதை இன்று காண்கிறேன். (கோமதி முன் மண்டியிட்டு) அம்மா, என்னை மன்னியுங்கள். நான் தவறுசெய்துவிட்டேன். இதுவரை நெருப்பைக்கண்டு மயங்கி விழுந்த விட்டில்போல் இருந்துவிட்டேன். இன்று என்னை மீட்டினீர்கள். என் கண்களை திறந்துவிட்டீர்கள். அம்மா என்னை மன்னிப்பீர்களா?

கோம: அண்ணு! ஐயோ, வேண்டாம் எழுந்திருங்கள்.

கவி: எனக்கு விமோசனம் உண்டா?

கோம: அண்ணு, தெய்வம் காக்கும்.

கவி: நான் இதுவரை வாழ்க்கையை ஒரு விளையாட்டாக மதித்து அற்பளுக இருந்துவிட்டேன். இன்று எனக்கு வெளிச்சத்தைக் காட்டினீர்கள். இப்போதே நான் நாடு முழுவதும் சுற்றி பாழான அந்த சைத்தான் நாகரீகத்தை தூரத்தவேண்டும். என் நாட்டின் பண்டைப் பெருமையையும் தெய்வீக நாகரீகத்தையும் பரப்பவேண்டும். அம்மா, இனித் தங்களை தாமதிக்கச்செய்யலாகாது. தங்களை உங்கள் மணவாளன் அழைத்துவரும்படி அந்த லெட்டரைக் கொடுத்தனுப்பினர். நான் அந்த லெட்டர் கொண்டு வந்த வேலைக்காரனை ஏமாற்றி, தங்களை இங்கு கொண்டுவந்தேன்.

கோம: அந்த வேலைக்காரன் எங்கே?

கவி: அவனை தந்திரமாய் அடுத்த ஊருக்குக் கடத்திவிட்டேன். நீங்கள் சுந்தரத்தைச் சந்திக்கவேண்டுமா?

கோம: ஆமாம், உடனே போகவேண்டும், பழைய மாளிகை தானே!

கவி: ஆமாம், வாருங்கள் நான் காட்டுகிறேன்.

[செல்கிருர்கள்]

## 24-வது சீன்

[காந்தா காட்டேஜ் மாடி. சுந்தரமும் காந்தாவும் உல்லாசமாயிருக்கிருர்கள். தெருக்கோடியில் கவிராஜுவும் கோமதியும் வந்து விடைபெற்றுக்கொள்ளுகிருர்கள். காந்தா அதை சுந்தரத்திடம் சுட்டிக்காட்டுகிருள்.]

காந்தா: யாரது? உங்கள் wife இல்லையா? அது யார்... கவிராஜ்! ஆமாம் இருவரும் சேர்ந்து.

சுந்: கவிராஜுடனு! கோமதியா? ஆமாம் கோமதிதான். என்ன அநியாயம்! அடி சண்டாளி! என்ன செய்யத் துணிந்தாய். நீ அவனையே சேர்த்துக்கொண்டாயா? புருஷன் ஒருத்தியை

வைத்துக்கொண்டாள். தானும் ஒருவனை சேர்த்து பழிவாங்கலாமெனவா துணிந்தாய். வா, உன்னை என்ன செய்கிறேன் பார்.

[விரைந்து சவுக்கை எடுத்து தயாராய் நிற்கிறான். கோபத்தால் உடல் படபடக்கிறது. கோமதி வருகிறாள். சுந்தரம் அவளுடைய தலைமயிற்றைப் பற்றி சவுக்கால் அடிக்கிறான். கோமதி துடிக்கிறாள்.]

சுந்: அடியே நீலி! என்னைப் பழிவாங்க...என் எதிரியுடன் அடியே...(அடிக்கிறான்.)

கோம: ஐயோ, நான் ஒரு பழியும் அறியேனே! நாதா கொஞ்சம் விசாரியுங்களேன்! நான் சொல்வதை......ஐயோ...... அம்மா...அப்பா...ஐயையோ...ஆ......பொறுக்கமுடியவில்லையே!

[மயங்கி விழுகிறாள். காந்தா அவளுடைய முதுகில் மிதித்து வர்மம் தீர்க்கிறாள்.]

## 25-வது சீன்

## வழி

கவி: என்ன! அந்த உத்தமியையா சந்தேகித்து அடித்தான். ஐயோ கொடுமையே! அந்த பத்னியையா? அடே சண்டாளா, அந்த மாணிக்கத்தின் மதிப்பை அறியாது இப்படி செய்யத் துணிந்தாய். ஜெகன் மாதாவே பிறந்திருப்பது போலல்லவா! அம்மா, உங்கள் பக்திக்கும் உருக்கத்திற்கும் இதுவோ பலன். சண்டாளி, அந்த நவ நாகரீகப் பேய் காந்தாவா அந்த உத்தமியை மிதிப்பவள். என்ன கொடுமை. இதோ நான் சுந்தரத்திடம்போய் கோமதியின் பெருமையைச் சொல்லி அவள் மேல் நம்பிக்கை உண்டாகச் செய்யவேண்டும்.

## 26-வது சீன்

## காந்தா காட்டேஜ்

[சுந்தரமும், காந்தாவும் மேஜைமேல் உல்லாசமாய் பானம் அருந்திக்கொண்டிருக்கிறார்கள். பழனி பரிமாறுகிறான்.]

சுந் : காந்தா! நேற்றைய Play இருக்கே ரொம்ப ஜோர். கிரேட்டா கார்போவின் ஆக்டே ஆக்ட்.

காந்தா : கிரேட்டா கார்போவைப் பார்க்க எனக்கே பெருமையாக இருக்கிறது. பெண்களின் உயர்வை உலக முழுதும் அறியும்படி செய்ய இந்தமாதிரி பெண்மணிகள் தான் வேண்டும்.

சுந் : க்யூன் கிரிஷ்டியானவாக வந்து அப்படி நிற்கிற அழகு இருக்கிறதே, ரொம்ப அருமை. (கவிராஜ் பிரவேசம்) யாரது ?

காந்தா : யார்?

கவி : நான்தான். ஒரு சமாச்சாரம்.

காந்தா : என்ன சமாச்சாரம் ?

கவி : மிஸ்டர் சுந்தரத்திடம்.......

சுந் : சும்மா...இப்படியே சொல்லுங்கள்.

கவி : அய்யா, நேற்று உங்கள் மனைவியை ஏதோ சந்தேகப் பட்டு அடித்தீர்களாம். அதைப்பற்றி......

சுந் : ஓகோ! உங்கள் ஆசைநாயகியை நான் அடித்துவிட் டேன் என்று! அதற்கா இவ்வளவு பரிவு! சரி போங்கள். உங்கள் ஆசைநாயகி கோமதியை நான் அடித்தது தப்பு, தப்பு!

கவி : மிஸ்டர் சுந்தரம், இந்தமாதிரி கண்ணியக்குறைவாகப் பேசவேண்டாம். அந்த உத்தமியை அப்படி எல்லாம் நினைக்காதே!

சுந் : உம் சர்டிபிகேட்டை அவளிடமே கொடு. அட சண்டாளா...என் மனைவியை ஏமாற்றியதுமில்லாமல் என்னிடம் சமாதானம் வேறு ?

காந்தா : நீர் எப்படி பெர்மிஷனில்லாமல் உள்ளே வரலாம்? Get out!

கவி : அடி சண்டாளி! உன்னால் அல்லவா இவ்வளவு கொடுமையும்......

சுந் : என்ன சொன்னாய் ?

காந்தா : அடே என்ன துணிவு! (ஓடி துப்பாக்கி எடுத்து வருகிறாள்.)

கவி: அடி உன் மமதை......!

சுந்: துப்பாக்கியைக் கொடு. இவனை......

[வாங்க முற்படுகிறான். அதற்குள் காந்தா சுடுகிறாள். கவி ராஜ் கீழே வீழ்கிறான். காந்தாவின் கையைப் பிடித்தபடி சுந்தரம் திடுக்குறுகிறான். பழனி மறைந்து பார்க்கிறான்.]



.........சுந்தரத்தின் கையில்......

கவி: ஆ.........

காந்தா: என்ன! மாண்டான்; ஐயோ இந்தக் குற்றம்! ஆம்...சுந்தரம்! அவன் மதிமயங்கி நிற்கிறான். அவனை......

[ஸ்தம்பித்து நிற்கும் சுந்தரத்தின் கையில் துப்பாக்கியைக் கொடுத்துவிட்டு ஓடுகிறாள். சிறிது நேரத்தில் சுந்தரத்திற்குச் சலனம் உண்டாகி பார்க்கிறான்.]

சுந்: ஆ, கவிராஜ் இறந்தான். என் மனைவியை அபகரித்து என்னை வஞ்சம் தீர்க்க நினைத்தவனு! சுட்டேன். என் எதிரி மாண்டான். ஆ...ஆ... (பைத்தியகாரன்போல் சிரிக்கிறுன்.)

கோம: (பிரவேசம்) என்ன, துப்பாக்கி சப்தம்...எங்கே? (சுந்தரத்தைப் பார்த்து) ஆ! என் நாதன். கீழே யார்? பிணம்! ஐயோ என் பிராணபதி! இனி என்ன செய்வேன்? போலீஸார் என் பிராணபதியை விடமாட்டார்களே! நாதா! (சுந்தரம் மூர்ச்சை மடைந்து விழுகிறுன்.) ஆ! கீழே விழுகிறுர். ஆமாம்! இந்தக் குற்றத்தை நான் செய்ததாக உடனே போலீஸாரிடம் சொல்லி விடவேண்டும். இல்லையேல் என் பதி தப்பமுடியாது! நாதா......

[சுந்தரம் வைத்திருந்த கைத்துப்பாக்கியை தான் எடுத்துக் கொண்டு தலைவிரி கோலமாய் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடுகிறுள்.]

என்னைக் கெடுக்க வந்தவனை நான் உயிரோடு விடுவதா? பெண்களுக்கு மானமல்லவா உயிர். அதை இழக்கமுடியுமா? அடே மூடா! என்னிடமா உன் ஜம்பம். அதற்குள் உன் கதியை பார்த்தாயா?

[பலவிதமாக சப்தமிட்டுக்கொண்டு செல்கிறுள்.)

## 27-வது சீன்

## போலீஸ் ஸ்டேஷன்

காந்தா: ஆமாம். என் கண்களால் பார்த்தேன். சுந்தரத் திற்கும், கவிராஜுவுக்கும் ஏதோ வாய் தர்க்கம் ஏற்பட்டது. என்னவெனப் பார்க்க வந்தேன். அப்போது சுந்தரம் கை துப் பாக்கியால் கவிராஜுவைச் சுட்டான். இதை பார்க்கவும் எனக்கு மிகவும் பயமாயிருந்தது. உடனே வந்துவிட்டேன். கொலையாளி எங்காவது தப்பிவிடுவான். இன்ஸ்பெக்டர் சார்! உடனே புறப் பட்டால் நல்லது.

சப் இன்: உம், அப்ப எத்தனை மணி யிருக்கலாம்?

காந்தா: ஐயோ, முதலில் அவனை கைது செய்யுங்கள். அவன் தப்பி விடுவான்.

சப் இன்: டே, three not four, three ten புறப்படுங்கள். (செல்கிறார்கள். சிறிது நேரம் கழித்து கோமதி வருகிறாள்.)

ரைட்டர்: யார்? என்ன இப்படி?

கோம: நான் காந்தா காட்டேஜிலிருந்து வருகிறேன். கவி ராஜ் என்பவன் என்னை மானபங்கம் செய்ய வந்தான். அதனால் அவனைச் சுட்டுக் கொன்றுவிட்டேன். நீங்கள் என்னைத் தேடி, நான் கைதியாவதிலும் நானே நேரில் ஆஜராகிறேன்.

ரைட்டர்: உன் பேரென்ன?

கோம: கோமதி.

ரைட்டர்: துப்பாக்கியை இப்படிக் கொடுங்கள். சரி உள்ளே போங்கள். Four eight not லாக்காப்பில் போடு.

[கோமதி அடைக்கப்படுகிறாள்.]

ரைட்டர்: என்ன? இப்போதுதான் இன்னொருவள் கவி ராஜ் என்பவனை சுந்தரம் சுட்டான் என்றாள். இவள் அதே நபரை தான் சுட்டதாகச் சொல்கிறாள். உம், பார்ப்போம்!

## 28-வது சீன்

## துப்பறியும் ராஜுவின் வீடு

து. ராஜு: (பத்திரிகையை வாசித்து ஆச்சரியப்படுகிறார்.) என்ன ஆச்சரியம். சென்ற வாரப் பேப்பரில் காந்தா காட்டேஜில் கொலை என்பதாகவும், சுந்தரமே கவிராஜுவைச் சுட்டதாக காந்தாவே நேரில் பார்த்தாகச் சொல்லி, சுந்தரத்தை கைது செய்திருப்பதாகவும், சுந்தரத்தின் மனைவி கோமதி தானே கவிராஜுவை சுட்டதாக போலிஸாரிடம் வலியச் சொல்லி கைதியாகப்பட்டிருப்பதாகவும் காணப்பட்டது. இன்றைய பேப்பரில் அதே காந்தா காட்டேஜிலிருந்து காந்தா தனக்கு 'மணமகன் தேவை' என விளம்

பரப்படுத்தியிருக்கிருளே! ஆம், இதில் ஏதோ மர்மம் இருக்கிறது! காந்தா யார்? காந்தாவிற்கும், சுந்தரத்திற்கும் என்ன சம்பந்தமிருந்தது. அவர்களுடைய வாக்குமூலம் எவ்வளவு உண்மையானவை எனக் கண்டுபிடிக்க வேண்டும். இந்த இரண்டு தின செய்திகளையும் கவனிக்க எனக்கே பெரும் சந்தேகமாயிருக்கிறது. குற்றமற்ற இரண்டு அருமையான உயிர்கள் சிக்கிக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நான் அவைகளை மீட்கவேண்டும். யார்? ஓ இன்ஸ்பெக்டர் கோவிந்தராஜுலு நாயுடுகாரா? வரட்டும். (இன்ஸ்பெக்டர் பிரவேசம்.) ஏது ரொம்ப அபூர்வமாயிருக்கிறதே. குழந்தை குட்டி எல்லாம்.........

இன்ஸ்: எல்லாம் உன் கிருபா கடாக்ஷத்தால் க்ஷேமம் தானப்பா! என் மூளை மூணு நாலு நாட்களாக ஒரு பெரிய சிக்கலில் தவிக்கிறது. நீ எனது பள்ளிச் சிநேகிதனல்லவா! உன்னிடம் வந்தால் ரிலீஸ் கிடைக்குமென நினைத்து இந்தப் பக்கமாய் வந்தேன்.

து. ராஜு: அப்படி என்ருல், மதினியிடம் சொல்லி மருந்து கொண்டுவரச் சொல்லவா?

இன்ஸ்: எதற்கு?

து. ரா: உன் மூளைக்கு மருத்துவம் பார்க்க......

இன்ஸ்: ராஜு, கொஞ்சம் தமாஷை நிறுத்தி நான் சொல்வதைக் கேள்.

து. ரா: என்ன விசேஷம்?

இ. கோ: ராஜு, இதுவரை எத்தனையோ அபூர்வமான கேஸ்களை எல்லாம் கண்டுபிடித்து உண்மையை வெளியாக்கி துப்பறியும் நிபுணர் எனப் புகழ்பெற்றிருக்கிருய்.

து. ரா: ஸ்தோத்திரமெல்லாம் மதினியாரிடமே போதும்.

இ. கோ: உஷ்...விடமாட்டாயோ!

து. ரா: Yes.

இ. கோ: இப்பொழுது உன்னுடைய ஆர்வத்திற்கும், சக்திக்கும் ஏற்ப ஒரு அருமையான கேஸ் கிடைத்திருக்கிறது. போன வாரம் கவிராஜுவை சுட்டதாக சுந்தரம் என்பவன் கைதியாக்கப்பட்டான். அவனுடைய மனைவி கோமதி தான்தான் சுட்டதாகச் சொல்லி ஸ்டேஷனில் ஆஜராகி கைதியாகியிருக்கிருள். சுந்தரம் சுட்டதை காந்தா தானே பார்த்ததாகச் சொல்கிருள். சுந்தரமும் இதை ஒப்புக்கொள்ளுகிருன். ஆனல் கோமதி குறுக்கிட்டு தன்னையே கொலையாளியாக்கிக்கொண்டு எங்களுக்கு ரொம்ப சிரமத்தைக் கொடுக்கிருள். இதில் கொலையாளி சுந்தரமா, அல்லது கோமதியா? பெரிய புதிராக இருக்கிறதப்பா!

து. ரா: மிஸ்டர், உண்மையில் இது ஒரு அதிசயமான கேஸ்தான். நீங்கள் வருவதற்கு முன்தான் இதைப்பற்றி சிந்தித்துக்கொண்டிருந்தேன். இதில் உங்களுடைய உதவியுமிருந்தால் கூடியசீக்கிரம் உண்மையை வெளியாக்கிவிடலாமென நம்புகிறேன்.

இ. கோ: மிஸ்டர் ராஜு! என்னுடைய உதவிக்கென்ன? இந்த நிமிடத்திலிருந்தே தயார்தான்.

[ராஜுவின் மனைவி பிரவேசம்]

மனைவி: சமையல் தயாராகிவிட்டது, கையலம்ப வாருங்கள் சாப்பிடலாம்.

து. ரா: மிஸ்டர், முதலில் சாப்பிட்டுவிடுவோம். அப்புறம் யோசனை செய்யலாம்.

[எழுந்து செல்கின்றனர்.]

## 29-வது சீன்

## காந்தா காட்டேஜின் உட்புறம்

காந்தா: நல்லவேளை கடவுள்தான் காப்பாற்றினர். கவிராஜுவை நான் சுட்டிருக்கக்கூடாது. துப்பாக்கியை சுந்தரத்திடம் கொடுத்துச் சுடச்செய்திருக்கவேண்டும். இப்போது

சுந்தரமும் கோமதியும் தாங்கள்தான் சுட்டதாகச்சொல்லி குற்றம் அவர்கள்மேல் போனதினுல் நான் தப்பிக்கமுடிகிறது. இல்லாவிட்டால்......ஐயோ, இப்போது நான் சிறைக்கம்பிகளினூடே இருக்க வேண்டும்! கோமதி என்ன இருந்தாலும் சுத்தப் பைத்தியக்காரி! இவள் ஏன் இப்படி தலையிட்டுக்கொள்ளவேண்டும்! தன்னுயிர் போனுலும் புருஷனுயிரைக் காக்கவோ! பைத்தியகாரி! வாழ்க்கை சுகமாக வாழ்வதற்கு என அறியாத பேதை! நம் வாழ்க்கையின் நோக்கம் சுகமே! முதலில் கவிராஜ். அவனைத் தள்ளிவிட்டு சுந்தரத்திடம் சுகவாழ்க்கை. அவனுடைய உயிர் ஊசலாடுகிறது. அதற்காக நான் தனியே இருப்பதா? பத்திரிகையில் நல்ல யௌவனமான bride-groom வேண்டுமென விளம்பரப்படுத்தியிருக்கிறேன். சீக்கிரம் கிடைக்கலாம்; பின் அமர வாழ்க்கை; அதை விடுத்து... கோமதி நீ சுத்த பைத்தியகாரிடீ!

[ராஜு பிரவேசம்]

காந்தா: யார்?

து. ரா: நான் திருச்சி ராக்போர்ட். காந்தா என்பது யார்? I want to see her.

காந்தா: Come on இப்படி உட்காருங்கள். Myself காந்தா!

து. ரா: காந்தா நீங்கள்தானு? உங்களுடைய அட்வர்டைஸ்மெண்டைப் பார்த்தேன். நானும் கல்வி அறிவு படைத்த ஒரு யௌவன மங்கையைத்தான் எதிர்பார்த்திருந்தேன். தாங்கள் மிகவும் பிடித்திருக்கிறீர்கள். தங்கள் சம்மதம் எப்படி?

காந்தா: தங்களைப் பார்க்க எனக்கு மிகவும் திருப்தி. ஆனுல் சில நிபந்தனைகள் உண்டு. பெண்கள் சுதந்திரத்தை நீங்கள் ஆதரிக்கவேண்டும். என்னுடைய பிரியம், அபிப்பிராயம் இவைகள் பாதிக்கும்படி நீங்கள் நடந்துகொள்ளக்கூடாது. சம்மதமானுல் உங்களை வாழ்க்கை துணைவராக ஏற்றுக்கொள்வதில் ஆக்ஷேபனை இல்லை.

து. ரா: ஆஹா மிகவும் நல்லது! பெண்கள் சுதந்திரமா? அதுதானே என் bloodல் கலந்திருப்பது. அதற்காக உலகமே எதிர்த்து வந்தாலும் விழித்தெழுந்த பெண்களுடன் நின்று போரிடத் தயார். காந்தா நீங்கள் என்ன சிறு குழந்தையா? உங்கள் போக்கை ஏன் தடைசெய்யவேண்டும். வாழ்க்கை சந்தோஷமாய் வாழத்தானே! இந்தமாதிரி அடக்குமுறைகளிருந் தால் முடியுமா?

காந்தா: ஓ I am very glad. உங்களை நான் வாழ்க்கை துணைவராக அடைவதில் பெரிய பாக்யவதி.

[கை குலுக்குகிருள்.]

## 30-வது சீன்

## சிறைக் கூடம்

கோம: தேவி! நானே சுட்டுக்கொன்றதாக ஒப்புக்கொண் டும் இன்னும் என் நாதனைப் பிடித்து வைத்திருக்கிருர்களே! அவர் மேலும் சந்தேகமோ! சந்தேகம் ஏன்? கவிராஜூவை சுட்ட கொலையாளி ஒப்புக்கொண்டபின் பிறர் ஒருவரை சிறையில் அடைத்து இம்சிப்பது என்ன நியாயம்? ஐயோ, அவர் இப்போது என்ன பாடுபடுகிருரோ! தான்தான் குற்றம் புரிந்ததாக அவ ருடைய ஆவி என்ன பாடுபடுகிறதோ! ஏ தேவி கிருபைசெய்! அவருக்கு நிம்மதி தந்து ஆதரி. உன்னைத்தான் நம்பியிருக்கிறேன்.

[சேவகன் ஆகாரத் தட்டுடன் பிரவேசம்]

சேவகன்: அம்மா, இந்த சாப்பாட்டுத் தட்டை வாங்கிக் கொள்ளுங்கள்.

கோம: (வாங்கிக்கொண்டு) ஏனய்யா? அவர் என்ன செய் கிருர்? கோடிப் புண்ணியம் உண்டு......

சேவ: அவரா அம்மா! பாவம் குந்தியபடியே கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு அசையாமல் இருக்கிருர். அழுது அழுது கண்ணீர் வடிந்தமணியமாயே இருக்கு. அன்ன ஆகாரம் கொஞ்சமேனும் தொட்டுப் பார்க்கிருரில்லை,

கோம: ஐயோ! பாவி நான் இந்த கோரத்தை கேட்கவா உயிர் வாழவேண்டும்! அய்யா, அவரிடம் நீங்கள் ஒரு வார்த்தை சொல்லவேண்டும். கோடிப் புண்ணியம் உண்டு.

சேவ: என்னம்மா!

கோம: அவரிடம், உங்கள் கோமதி, உங்கள் விடுதலைக்காக தேவியை பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறாள். சீக்கிரமாக விடுதலை கிடைத்துவிடுமென உறுதியாகச் சொல்லுகிறாளெனச் சொல்லுங்கள். மனங்கலங்கி உடம்பை அலட்டிக்கொள்ள வேண்டாமென நான் வேண்டிக்கொண்டதாகவும் தெரிவிக்க மாட்டீர்களா?

சேவ: இந்தமாதிரி தூதுத் தொழில் நான் செய்தால் என் தலைக்கே......அம்மம்மா......நான் மாட்டேன்!

கோம: ஐயா, கோடிப்புண்யம்......

சேவ: ஊ ஹூம் [தலையை ஆட்டிச் செல்கிறான்]

கோம: என் மணவாளன் நிம்மதியாக இருக்க தெய்வமே நீதான் துணை செய்யவேண்டும். நடந்த கொலைக்கு நான் பாத்தியப்படுகிறேன். உயிருக்கு உயிர் வேண்டுமானால் நான் தருகிறேன்.

[துப்பறியும் ராஜு பிரவேசம்]

து. ரா: (தனக்குள்) காந்தாவை மணந்துகொள்வதாக நடித்து அவளிடமிருந்து உண்மையை கிரஹித்தவரை இதில் காந்தாதான் சுட்டவள் என உறுதியாய் அறியமுடிந்தது. நேற்று மாலை உல்லாசமாயிருந்த சமயம் கற்பனையாக கள்ளக் காதலன் ஒருவனின் மையலினால் தன் புருஷனை வஞ்சித்து அவனை கொலைசெய்த ஒரு பெண்ணைப்பற்றிய கதை சொன்னபோது அவளுடைய சிவந்த முகம் குப்பென இருளடைந்தாற்போல் மாறிவிட்டது. அவளுடைய உள்ளம் பீதியினால் நிறைந்து ஒடுங்கியது நன்றாகத் தெரிந்தது. அதுவுமல்லாமல் அதே சம்பவத்தை இன்னும் விரிவுபடுத்திக் கூறியபோது "ஐயோ இதை விட்டுவிட்டு வேறொரு கதையைச்

சொல்லுங்கள்” என அஞ்சியதை நினைக்க அவளும் அத்தகைய குற்றவாளிதானெனக் காட்டிக்கொண்டாள். சந்தேகமில்லை. இருக்கட்டும் இன்னும் சரியான ஆதாரங்களுடன் அவளை கோர்ட்டில் ஆஜர்படுத்துவோம். அதற்குள் கோமதியையும் சுந்தரத்தையும் சந்தித்து விசாரித்து வருவோம். ஆஹா! குற்றமற்ற இந்த மாது சிரோன்மணிக்கு சிறைக்கூட வாசமா? (அருகில் சென்று) அம்மா! அம்மா!!

கோம: யாரய்யா?

து. ரா: அம்மா! குற்றமற்ற நீங்கள் வலிய குற்றவாளியாக்கிக்கொண்டிருக்கிறீர்கள். இதில் உண்மைக் குற்றவாளி யார் என்பதைக் கண்டுபிடிக்கவேண்டியது என் பொறுப்பு. உங்களிடம் சில உண்மைகள் தெரிந்து போகலாமென வந்திருக்கிறேன்.

கோம: ஐயா, துப்பாக்கியால் சுட்டது குற்றமில்லை என்றால் நீங்கள் சொல்வது சரி. இல்லையேல் நீங்கள் வீணாக நேரத்தைப் போக்குகிறவர் ஆவீர்.

து. ரா: அம்மா, நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். நான் இதுவரை முயற்சித்துப் பார்த்ததில் நீங்கள் நினைக்கிறபடி உங்கள் புருஷனே அல்லது நீங்களோ கவிராஜனைவச் சுடவில்லை என்பதை நிச்சயமாய் அறிந்துகொண்டேன். நீங்கள் இதை அற்பமாக நினைக்கவேண்டாம். கடைசியில் பெரிய ஆபத்தில் கொண்டுவந்து விடலாம்.

கோம: நான் தண்டனையை ஏற்க பின்வாங்கப்போவதில்லையே!

து. ரா: அம்மா! இதில் குற்றவாளியாக்கப்பட்டிருப்பது நீங்கள்மட்டுமல்ல; உங்கள் புருஷரும்தான் என்பதை மறந்துவிடாதீர்கள். நீங்கள் குற்றவாளி என்பதற்கு நீங்கள் சொல்வதுதான் சாக்ஷி. ஆனால் உங்கள் கணவர் சுட்டதை அவரே ஒப்புக்கொள்வதுமட்டுமல்ல, காந்தாவும் தானே நேரில் பார்த்ததாகச் சொல்லுகிறாள். ஆதலால் அவரே இதில் அதிக ஆபத்தில் சிக்கி இருக்கிறார்.

கோம: யார்! காந்தாவா அப்படி சாக்ஷி சொல்கிருள் ?

து. ரா: ஆமாம். அவளே சுந்தரம் சுட்டதை நேரில் பார்த்தாளாம்.

கோம: ஐயோ! அப்படியானுல் என் பிராணபதியின் விடுதலைக்கு என்ன வழி? ஐயா, தயவுசெய்து காப்பாற்றவேண்டும்.

து. ரா: வேறு ஒன்றுமில்லை. உண்மையில் சுட்டது யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டியதுதான்.

கோம: அப்படியானுல் என்னிடமிருந்து தாங்கள் விரும்புவது என்ன?

து. ரா: வேருென்றுமில்லை. என் மனதில் இருக்கும் குழப்பம் தீரவேண்டும். நீங்கள், ஏன் துப்பாக்கியை எடுத்து ஸ்டேஷனுக்கு ஓடி குற்றத்தை தன்மேல் சுமத்திக்கொண்டீர்களென்பதைச் சொன்னுல் போதும்.

கோம: நான் திக்கற்றிருக்கிறேன்.

து. ரா: அம்மா, என்னை பூரணமாய் நம்புங்கள்.

கோம: ஐயா, தாங்கள்தான் எங்களுக்குக் கதி. என் உடன் பிறந்த பிறவியாகச் சொல்கிறேன். நான் சொல்வதினுல் என் பர்த்தாவிற்கு யாதொரு தீங்கும் ஏற்படாதென தயவுசெய்து உறுதி சொல்லுங்கள்.

து. ரா: அம்மா, உன்னுடைய பர்த்தாவின் நலத்தை உத்தேசித்தே இந்தக் கேள்வி.

கோம: ஐயா, அன்று நான் உடம்புக்கு அசௌகரியமாய் படுத்திருந்தேன். துப்பாக்கி சுடும் சப்தம் கேட்டது. பதறி ஓடினேன் கீழே கவிராஜ் கிடந்தார். என் பர்த்தாவின் கையில் துப்பாக்கியுடன் மெய்மறந்து கீழே விழுந்தார். என் பர்த்தாதான் சுட்டிருப்பாரெனவும் போலீஸார் கைது செய்து அதற்கான தூக்குத் தண்டனை கொடுத்துவிடுவார்களென நினைத்து அவரைக் காப்பாற்றும்பொருட்டு நானே சுட்டதாக சொன்னேன்.

வேறொன்றுமில்லை, என் புருஷரைக் காப்பாற்றவேண்டியது தங்கள் பொறுப்பு. உங்கள் காலைப் பிடித்துக் கெஞ்சுகிறேன் அண்ணு!

து. ரா: அம்மா, உன் பதிக்கு ஒரு கெடுதியும் ஏற்படாது. உறுதியாக இரு, சீக்கிரம் உங்களுக்கு விடுதலை கிட்டும். நான் வருகிறேன்.

கோம: ஐயா, தங்களைத்தான் நம்பியிருக்கிறேன்.

[துப்பறியும் ராஜு விடைபெற்றுக்கொள்கிருன்]

து. ரா: ஆஹா! இந்தப் பெண்மணி கணவன்மேல் எவ்வளவு அன்புள்ளவளாயிருக்கிருள். காந்தா, உன் நவநாகரீகப் பித்து எந்தவிதமான துரோகமும் செய்யத்தூண்டும். ஆஹா, பார்த்தாயா இந்த உத்தமியின் தியாகத்தை. நமது சகோதரிகளும் பண்டைய வாழ்க்கையின் மேன்மையை உணர்ந்து இந்த நவநாகரீக பைசாச வாழ்க்கையில் தடுமாறி விழாமலிருந்தால் எவ்வளவோ நலமாயிருக்கும். சுந்தரத்தைச் சந்தித்து அவனுடைய நிலையை அறிந்து வருவோம்.

[செல்கிருன்.]

## 31-வது சீன்

## சிறைக்கூடம்

சுந்: ஆம், என் உத்தம மனைவியை வஞ்சித்ததன் பலன் கைமேல் கிட்டியது. ஐயோ, நான் ஏத்தகைய மகாபாவி! பத்தினியாகிய என் அருமை கோமுவை சண்டாளன் வெறுத்தேனே! படுபாவி; நான் காந்தாவை அழகிய யுவதியென 'விஷத்தை சீனி என' உட்கொண்ட நிர்மூடன் நான். கண்மணி கோமு! உன்னை வஞ்சித்தேனே, அதற்கு மன்னிப்பாயா? எனக்கு மன்னிப்பு கிட்டுமா? தெய்வம் என்னை மன்னிக்குமா? எனக்கு விமோசனமில்லை. இந்த சண்டாளனை இன்னும் உன் புருஷனென நினைத்து நான் சுட்டதை, தான் சுட்டுக் கொன்றதாக பழியைத் தன்மேல்

சுமத்திக்கொள்ளலாமா? ஏ கோமு! அன்று என்னை ஆவலோடு தேடி வந்த உன்னை, அந்தப் பாதகி காந்தாவின் முன் உன் கன்னங்கள் அதற அறைந்த அந்தக் கொடுமையை மறந்துவிட்டாயா? கற்புக்கரசியான உன்மேல் சந்தேகப்பட்டு மயங்கிவிழும்வரை சவுக்கிஞல் அடித்தும் உன்னை அந்த பிசாசு அவளுடைய காலால் மிதித்தபோது பார்த்துக்கொண்டு அதில் ஆனந்தமடைந்த இந்தக் கொடிய பாவியை நீ எப்படி சகிக்கிருய்? வேண்டாம். இவன் சாக வேண்டும். என் சடலத்தை நரி, நாய், கழுகு, காகம் பிய்த்துக் குதறித் தின்னவேண்டும். ஐயோ, என்ன கொடுமை. நான் போன சோரத்தை அறியாமல் நீ சோரம்போனுய் என எவ்வளவு துடிதுடித்தேன். பெண்கள் தாஞ கற்புத்தவருமலிருக்கவேண்டும். என்ன மமதை எனக்கு. நான் விபச்சாரஞகிய கொடுமையைக் கொஞ்சமேனும் சிந்தித்துப் பார்த்தேஞ! ஆம் பெண்கள் தான் தன் கணவனைத் தவிற வேறு ஆடவரை கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாதென்பதுபோல், ஆண்களும் அதே ஏகபத்னி விரதத்துடனிருந்தால் எவ்வளவு மகிமை! தவறி பாதாளத்தில் சறிந்து விழுந்தேனே! ஏ காமப்பிசாசே! என்னைக் கெடுத்ததுடஞவது ஒழி! என்போன்ற இளைஞர்களாவது அவர்களுடைய பத்னிமார்களுடன் ஆனந்தமாய் வாழட்டும். [துரைராஜு பிரவேசம்.]

து. ரா: மிஸ்டர் சுந்தரம்.

சுந்: யார்? என்ன விசேஷம்?

து. ரா: நீங்கள் சிக்கியிருக்கும் இந்த வழக்கில், நீங்கள் குற்றவாளி இல்லை என நினைக்க ஆதாரங்களிருக்கின்றன.

சுந்: நான் இல்லை என்ருல் பின் யார்? நானே என் கையால் கவிராஜுவை துப்பாக்கியால் சுட்டவன். பின் என்ன ஆதாரம் வேண்டியிருக்கிறது? பாவம், அந்தப் பெண் கோமதி, ஏதோ பைத்தியமாய் தான் தான் சுட்டதாகச் சொல்கிருளே அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு வந்திருக்கிறீர்போலும். சரி சரி, போம்.

து. ரா: ஐயா, கொஞ்சம் கவனியுங்கள். ஆத்திரம் வேண்டாம்.

சுந்: உம்மோடு பேச தயாரில்லை. நீர் போம். [ஒரு மூலையில் படுத்துக் கொள்கிறான்.]

து. ரா: இவன் இப்போது மதிமயங்கி இருக்கிறான். இவனோடு சந்தித்து நேரத்தைப் போக்குவதிலும், கூடிய சீக்கிரம் போதிய ஆதாரங்கள் சேர்க்க முயற்சிப்பதே மேல்.

[செல்கிறான்.]

## 32-வது சீன்

## காந்தா காட்டேஜ்

து. ரா: ஆமாம். இந்த டிரிங்குடன் சில மயக்க மருந்துகளைச் சேர்த்துக் கொடுப்போம். காந்தா மயங்கி உளரும்படி ஏற்படலாம். அவள் மனதில் எது ஆழ்ந்திருக்கிறதோ அதுவே வெளியாகிவிடும். அதிலிருந்து ஏதேனும் எவிடன்ஸ்......ஆம், அதுவே சரி. [பானத்தில் மருந்து கலக்கிறான்.]

Come on, have a drink?

காந்தா: Thank you. [குடிக்கிறாள்.]

து. ரா: காந்தா, என்ன அது? இருள்! இருள்! ஏதோ பூதம்மாதிரி. ஐயோ காந்தா! [பயந்தவன்போல் அவளைத் தன் கைகொண்டு பின்னரிக்கிறான்.]

காந்தா: ஆமாம். யாரது? நான் இல்லை. ஐயோ, நான் செய்யவில்லை. என்னை விட்டுவிடுங்கள். பழனி, நீ தான் துணை செய்யவேண்டும். உடனே ஓடி இந்த உடைகளை சுட்டெறித்துவிடு. ரத்தக்கரை தெரியக்கூடாது. தெரிந்தால் என்னுயிர் போச்சு. போ. உனக்கு இந்த இருநூறு ரூபாய் தருகிறேன். இன்னும் தருகிறேன். என்னைக் காட்டிக்கொடுத்துவிடாதே!

து. ரா: ஆ! இருள். நான் மாட்டேன் காந்தா! காந்தா, போ. உஸ் ஓடிப்போ. ஐயோ, பயமாயிருக்கிறதே!

காந்தா: நான் என்ன செய்வேன்? போலீஸார் என்னைப் பிடித்துவிடுவார்களே. நான் என்ன செய்வேன்?

# 33-வது சீன்

## வேலைக்கார பழனியின் குடிசை

[திண்ணையில் துப்பறியும் ராஜூ பிச்சைக்கார சாதுவைப் போல் படுத்திருக்கிறான்.]

லக்ஷ்மி: அம்மா, எனக்கு பாவாடை சட்டை வாங்கித்தா.

குப்பி: உங்கப்பனிட்டேப் போய் கேளேன். அதுக்கும் நானா?

லக்ஷ்மி: உம், உம். அப்பே அடிக்கும். போமா, நீ வாங்கித்தா.........

குப்: போ சனியனே! திருநாள் நெருங்கிடுச்சு, பிள்ளைக்கு ஒரு ஆன துணிமணி உண்டா? உன்னைக்கட்டி அழறதுக்கு....

பழனி: சனிக்கிழமை நாளைக்குத்தாண்டி. அன்னைக்கு ஜவுளி எடுக்கவும்கூடாது. உடுக்கவும்கூடாதுடீ.

குப்: உன் காதுலே தீயை வைக்க. (இறைந்து சொல்கிறாள்.) திருவிழா வருதே. பிள்ளைக்கு ஒரு துணிமணி ஒன்று வந்தா.........

பழனி: அதுவா! எரனூரு ரூபா கொண்டாந்தேன் அத்தை மாத்தக்கூடாதென வைத்துக்கிட்டே அப்புறம் என்னை எண்டி குறை சொல்றே! அதுகிடக்கட்டும் அடி குப்பி அதுக்கு எல்லாம் சரியா வைத்திருக்கிறேன். இங்கே வா, மெத்த ரகசியம்.

குப்: என்னாது?

பழனி: நம்ம எஜமானியம்மா, காந்தா இல்லே. அவுக ஒரு சேதியாய், அவுக சேலே, ரவுக்கை எல்லாம் கொடுத்து தீயிலே எறிச்சுப்புடச் சொன்னாங்க......

குப்: என்னத்துக்கு?

பழனி: அத்திலே ரெத்தம் ஒட்டியிருக்கு அதனாலே. நானு அதை எறிச்சுப்புடாமல் பிள்ளைக்கு வேணுமுண்ணு வைத்திருக்கேன்

நாளைக்கே எடுத்தாந்து அந்த ரெத்தம்பட்ட இடத்தை அப்படியே வெட்டிவிட்டு பிள்ளைக்கு நல்ல சட்டை பாவாடையாய் தைத்துக் கொள்ளலாம்.

குப்பி: அட என் மரிக்கொழுந்தே! அவ்வளவு தந்திர மெல்லாம் தெரியுமா? வா உள்ளே!

[செல்கின்றனர். து. ராஜு எழுந்து]

து. ரா: [தனக்குள்] பழனி இதற்கு முக்கிய சாக்ஷியம். காந்தா நீ ஒரு பெண்ணாக இருந்தும் பிசாசுமாதிரி எந்தெந்த விதமாக கொடுமை செய்து தந்திரமாய் குற்றமற்றவர்கள்மேல் பழி சுமத்தி யிருக்கிறாய்.

[குப்பியும், பழனியும் சேலையுடன் பிரவேசம்.]

குப்: அடே, என்ன மாதிரி சேலையாருக்கு. நான் உன் னிட்டே வந்தே புடிச்சு இந்தமாதிரி ஒரு சேலையாவது உண்டா? நல்லா வந்தேன்.

பழனி: என்ன? என்ன சொல்றே. பலமாய் சொல்லுடீ.

குப்: இந்த சேலையைப்பாரு. என்னமாதிரி அழகாயிருக்கு.

பழனி: உம், அதுவா. போடி போ பயித்தியகாரி. அவுக தானா நம்ம. இந்த ஒரு சேலதானா? இன்னம் என்னென்ன மாதிரி எல்லாம் அவுக கிட்டே இருக்கு. நிமிஷத்திற்கு ஒரு புடவை. கொஞ்ச நேரத்தில் அதை உரிஞ்சு போட்டுட்டு இன் னொன்னு. அதையும் மாற்றிட்டு இன்னொன்னு. அவுக தானடி நீ. அவுக, சேலையை மாத்திக்கிற மாதிரி புருஷனையும் மாத்திக்கிறா களே. அவுக தானா நீ. பயித்தியகாரி.

குப்: உம், சரி சரி. நிறுத்து.

[உள்ளே செல்லல்.]

[து. ராஜு தையல்காரன் வேஷமிட்டுக்கொண்டு தையல் மிஷின், குழந்தைக்கு சட்டை துணியுடன் பிரவேசம்.]

குப்: போனா, போனேன் வந்தேன்னு வரணும் ஆமா!

பழனி: வரணுமா? நீ எதுக்குடி!

துப்: செவிடு சீக்கிரமாய் வாரு, என்னமோ......

லெக்ஷ்மி: நானும்......உம்...உம்...

பழனி: சீ, கழுதை! போகிறப்போ எல்லாம் காலைக் கட்டிக்கிட்டு.........

துப்: சரி, அளவு சரியாயிருக்கணும். இவளையும் கூட்டிக்கிட்டு போய்வா. ஆமா! அளவு நல்லாருக்கணும். [பழனி குழந்தையைப் பிடித்துக்கொண்டு புறப்படுகிறான்.]

[து. ராஜு, குறுக்கே போகிறான்.]

துப்: அந்தா, அந்தா பாரு தையல்காரனை. அடே! கும்பிடப்போன சாமி குறுக்கே வந்தாற்போலே!

து. ரா: பாவாடை, சட்டை, சின்னச் சின்னப் பிள்ளை... சிங்காரக் கௌன்.... தையல் தைக்கலியோ தையல்...

பழனி: ஆமாடி இந்தா பாரு ரொம்ப பேஷ். ஐயா, தையல்காரரே! இப்படி வாங்க.........

து. ரா: என்ன ஐயா ஏதேனும் தைக்கணுமோ!

துப்: ஆமாங்க எங்க பிள்ளைக்கு பாவாடை சட்டை எல்லாம் தைக்கணும்.

பழனி: இப்படி வீட்டுக்குள்ளே வாங்கள்.

[உள்ளே போகிறார்கள். பழனி ஒரு துணிச் சுருளைக்கொடுக்கிறான். து. ராஜு சுற்றியிருந்த பேப்பரைப் பிரித்து துணியை விரித்துப் பார்க்கிறான்.]

து. ரா: உம், இதென்ன அய்யா ரெத்தம். இதை இப்படியே வெட்டி எடுத்துவிடவேண்டும்.

துப்: ஆமாங்க கோழி ரெத்தம் பட்டுடுச்சு.

பழனி: இந்தப் பிள்ளைக்குத் தாங்க. சரியாய் அளவு பாருங்க. நல்லா தைக்கணும்.

து. ரா: வேலையைப் பார்த்துட்டு அப்புறம் சொல்லுங்க. கூலி மாத்திரம் சரியாய்க் கொடுத்தால் வேலையைச் சொல்லவா வேண்டும். சட்டை தைக்கிறதுக்கு ஒம்போதுட்டு கொடுக்கணும். பாவாடைக்கு எழரைத்துட்டு. அப்புறம் வேலையைப் பாருங்கள்.

பழனி: என்ன சொல்ருருடி?

துப்: என்னய்யா, ஒம்போதுட்டு, எழரைத்துட்டு ச்சோ. ஒரு வீடு கட்டுகிற கூலி கேட்கிறீங்களே!

து. ரா: வேலைக்காரனுக்கு கூலி தானுங்க கொடுக்கணும்.

துப்: இப்படியா? ஒரு மூணு துட்டு. கூடுனு நாலரைத் துட்டு. அதை விட்டுட்டு இவ்வளவா!

து. ரா: வேலையை வேண்டுமானல் பாருங்க. காத்துட்டுத் தான் கொடுக்கலாமென்ருலும் கொடுங்கள். ஆனல் இந்தக் கூலிக்குக் குறைஞ்சா எனக்குக் கட்டாது.

பழனி: தையுங்கய்யா சீக்கிரம். என்னமோ மசமசன்னு.

துப்: அட சனியனே! கூலி பேசுவதற்குள் அவதியா? கூலியை கரைக்கட்டா கேளுங்க.

து. ரா: ஆமாம்மா, நானும் அப்படித்தான் சொல்றேன். கழுத்துக்கு நெக். கைக்கு ஹேன்டு. உடம்புக்குப் பாடி. பையுக்கு பாக்கெட். இவ்வளவும் வைக்கணும். நீங்களாச் சொல்லுங்க எவ்வளவு வேலையிருக்கு.

துப்: அப்படினு சரி, செய்யுங்க. வேல ரொம்ப நைஸா இருக்கணும். திருவிழாவிற்கு குழந்தை போட்டுக்கிறது.

து. ரா: அதுசரி. எம்மா, இந்தப் பிள்ளைக்கு எத்தாப் போலே ஒரு சட்டை, ஒரு பாவாடை இருக்கு. என் கை திறமை எல்லாம் காட்டித் தைத்திருக்கிறேன். வேண்டுமானல் சொல்லுங்கள். அதைக் காட்டுகிறேன்.

துப்: எங்கே, எடுங்கள்.

[து. ராஜு எடுக்கிறுன்.]

துப் : அடே! இந்தாய்யா, இது என்ன விலை!

லக்ஷ்மி : அம்மா! இது எனக்கு...உம்...எனக்கு.

து. ரா : ரெண்டும் ஒன்னேகால் ரூபாயும் மூணு மூக்காத் துட்டும். பாப்பா போட்டுப்பாரு.

[லக்ஷ்மி அணிந்து குதிக்கிறது.]

துப் : அட! நல்லா இருக்கே! ஏ, இந்தாங்க...இது ரெண்டையும் நம்ம பாப்பாவுக்கு வாங்கிவிடவேண்டும்.

து. ரா : ரொம்ப நல்லா இருக்குமம்மா!

பழனி : காசு?

துப் : தாலிதான். எப்பப் பார்த்தாலும் எடுக்கிறதற்கெல்லாம் காசுதான். இருந்து இருந்து இந்த பாவி வீட்டுக்கு வந்தேனே! பிள்ளைக்கு ஒரு நல்ல சட்டை...துணி...உண்டா?

து. ரா. அம்மா வருத்தப்படாதிங்க. காசு இல்லாட்டினு நான் ஒண்ணு சொல்றேன்.

துப் : என்னய்யா?

து. ரா : இந்தச் சட்டையையும், பாவாடையையும் உங்களுக்குத் தந்துடறேன். நீங்க இந்தத் துணியைத் தந்துடுங்க. நான் வெட்டி வேறொன்னு தைச்சிக்கிறேன்.

துப் : அடா, அப்பன்னு சரி. ஏ இந்தாவேன். அதுகளை தையக்கார அய்யா வைச்சுக்கொள்ளட்டும். நமக்கு இந்தப் பாவாடை.

பழனி : அட! அது வேண்டாம்.

லக்ஷ்மி : நான் மாட்டேன்...உம்...உம்.

துப் : பேசாமே இருந்து தொலையேன். நீங்க அதை கொண்டுபோங்கய்யா.

[து. ராஜு துணியையும், பத்திரிகையையும் எடுத்துச் செல்கிறான்.]

பழனி : ஏண்டி குப்பி, அம்மா அதை எறிச்சுப்புடச் சொன்னாகளே!

தூப்: எறிஞ்சுபோறதை இந்த மனுஷன் எடுத்துக்கொண்டு போருன். நமக்கு இந்த அழகான பாவாடை, சட்டை...வா இப்படி.

[செல்கின்றனர். லெக்ஷிமி குதித்து பாடுகிருள்.]

து. ரா: (பத்திரிகை ஓரத்தில் வாசிக்கிருன்.) இவைகளை யாரும் அறியாமல் தீயில் எறித்துவிடு. நான் தான் சுட்டதாக யாரிடமும் சொல்லிவிடாதே! இப்ப 200 ரூபாய் இந்தா. இன்னும் உனக்கு ரூபாய் தருகிறேன்!! ஆமாம்! அவன் செவிடன். வாயினுல் சொன்னுல் சீக்கிரம் அறிந்துகொள்ளமுடியாது என்பதற்காக எழுதிக்காட்டியிருக்கிருள்போலும். இதன் மூலம் காந்தாவே சுட்டிருப்பது சந்தேகமில்லாமல் வெளியாகிறது. சுட்டபோது சிதறிய ரெத்தம், அவளுடைய சேலையில் பட்டிருக்கிறது. நாளை கேஸ் ஆர்குமெண்டு. நாம் இதை ஆஜர் செய்யலாம். காந்தா இனி நீ யாரையும் குற்றம் சுமத்தவோ தப்பித்துக்கொள்ளவோ முடியாது.

[செல்கிருன்.]

## 34-வது சீன்

## காந்தா காட்டேஜ்

காந்தா: மிஸ்டர் ராஜு, நம்முடைய marriageஐ என் தாமதப்படுத்தவேண்டும். இப்பவே போய் ரிஜிஸ்டர்செய்து விடலாமே!

து. ரா: காந்தா, அதனுலென்ன? ரிஜிஸ்டர் செய்தால் தானு நம்முடைய கலியாணம் ஊர்ஜிதம். அதுவும் வேண்டுமானுல் செய்துகொள்வோம். நாளை கேஸூம் ஒரு முடிவுக்கு வந்துவிடும். அப்புறம்......

காந்தா: கேஸ் என்ன? அதுதான் சுந்தரம் நிச்சயமாக தண்டிக்கப்பட்டுவிடுவானே! அதில் சந்தேகம் வேறு?

து. ரா: காந்தா, நான் அதைத்தான் விரும்புகிறேன். அவனைத் தண்டித்த பின் தான் நாம் நிம்மதியாகவும் திரியலாம்.

காந்தா: அது என்ன? நாளை தூக்கில் மடியப்போகும் அவனால் நமக்கென்ன? கொலைகாரன் பேச்சைவிட்டுவிட்டு, வேறு பேசுங்கள். வாருங்கள் கொஞ்சம் drink......

## 35-வது சீன்

## கோர்ட்டு

வக்கீல் ராமசாமி அய்யர்: யுவர் லார்ட்ஷிப், இந்த வழக்கில் எவ்வித சிக்கலுமில்லை எனத் தெரிவிக்க விரும்புகிறேன். 1-வது எதிரிக்கும், கவிராஜுவுக்கும் மனத்தாங்கல் இருந்ததற்கு நிறையக் காரணம் இருக்கிறது. காந்தா கவிராஜுவை மணந்திருந்தவள்; அவரை விட்டுவிட்டு சுந்தரத்துடன் தன் வாழ்க்கையை நடத்தும்படி ஏற்பட்டது கவிராஜுவுக்கு சுந்தரத்தின்மேல் ஆத்திரம்கொள்ள சரியான காரணம். இதனால் அவர்கள் சந்திப்பில் பேச்சு முற்றி 1-வது எதிரி கோபமடைந்து கவிராஜுவை சுட்டான் எனவும் எதிரியே ஒப்புக்கொள்ளுகிறான். இதுமட்டுமல்ல. அவ்விதம் சுட்டதை தற்செயலாய் அங்கு வந்த காந்தா காணும்படி ஏற்படலாயிற்று. சட்டப்படியும், நீதிப்படியும் காந்தா இந்தக் கொடிய கொலை விபரத்தை போலீஸுக்கு உடனே தெரிவித்துவிட்டார்கள். இதில் 1-வது எதிரி கொலை செய்யவில்லை என்பதற்கு எத்தகைய ஆதாரமும் கிட்டவில்லை.

சோமு: பொய்! பொய்! இல்லை! இல்லை! கொன்றவள் ஒருத்தியிருக்க, இன்னொருவர் மீது வீண் பழி சுமத்தலாமா? இல்லை! என்னுடைய கணவர் கொலை செய்யவில்லை. நான்... நானே கொன்றேன்.

ஜட்ஜ்: Order.

மொழிபெயர்ப்பாளர்: அம்மா, உங்களுடைய வாக்குமூலம் அப்போதே கேட்கப்பட்டுவிட்டது. இனி அதைப்பற்றி முடிவை எதிர்பார்க்கவேண்டியதுதான் உங்கள் வேலை. ஊடே இப்படி சப்தம் போடலாகாது.

சுந்: எஜமான்! அவள் அப்பாவி...பேதை. தயவுசெய்து மன்னியுங்கள். என் மீதுள்ள அன்பால் இப்படிப் பதறுகிருள். கோமு, கொஞ்சம் அமைதியாக இரு. என்னிடம் நீ என்ன சுகத்தை அடைந்தாய் கண்ணே! நீ ஏன் குற்றம் சுமத்தி இம்சை அடைகிருய்!

வ. ராம: 2-வது எதிரியின் முறையீடுதான் இதில் சிக்கலுண்டாக்குறதெனினும் அவ்வளவு பிரமாதமில்லை. இதற்கு என்னுடைய நண்பர் ராகவ அய்யங்காரவர்கள் நன்ருக எடுத்துச் சொல்லி மறுத்தார்கள். எதிரி இந்துக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பதும், ஒரு கண்ணியமான குடும்பத்தில் உதித்தவள்; புருஷனை தெய்வமாகக் கொண்டாடியும் அவனுடைய நலத்தை உத்தேசித்து எத்தகைய தியாகமும் செய்யக்கூடியவர்கள் இந்துப் பெண்கள். இதற்கு உத ரணமாக சரித்திரங்களில்மட்டுமல்ல, பிரத்தியக்ஷமாக எத்தனையோ சம்பவங்கள் நடப்பதையும் காண்கிருேம். அதன்படி இவள் தன் புருஷனுக்கு ஏற்பட்ட ஆபத்தைத் தீர்க்க தன்னையே குற்றவாளியாக்கிக்கொண்டு முன் வந்திருப்பதாக என் நண்பர் சொல்லியது முற்றிலும் உண்மை. அதை என் முழு மனதுடன் ஒப்புக்கொள்ளுகிறேன். அதுவுமட்டுமல்ல. இன்னும் 2-வது எதிரி இவ்விதம் முன் வந்திருப்பதில் வேறுவிதமாக யூகிப்பதற்கும் இடமிருக்கிறது. இவ்விதம் ஒரு கொலையை இருவர் தான்தான் செய்ததாகக் குழப்பினல் தெளியமுடியாமல் கேஸ் உடைந்து குற்றத்திலிருந்து விடுபடலாமென தந்திரம் செய்திருக்கலாம்.

எதிரி தரப்பு வக்கீல் ராகவய்யங்கார்: யுவர் லார்ட்ஷிப், இவருடைய பேச்சை நான் ஆக்ஷேபிக்கிறேன். இரண்டாவது எதிரி கண்ணியமான குடும்பத்தில் பிறந்தவளென்றும், பதிவிரதா தருமம் காக்கும் சதியென புகழ்ந்த அதே வாயால் இப்போது சதிகாரி என இழித்துரைப்பது சரியல்ல.

வ. ராம: அதை யூகிப்பதற்கோ, எடுத்துரைப்பதற்கோ எனக்குப் பூரண உரிமை இருக்கிறதென்பதை வற்புறுத்த விரும்புகிறேன்.

வ. ராகவ: கவிராஜ் சுட்டு விழுந்ததற்குள், எதிரிகள் இருவரும் சந்தித்து எனது நண்பர் சொல்லியபடி சதி செய்ய நேரமிருந்திருக்குமா?

வ. ராம: இருக்கலாம். இப்போதையப் பிரச்னை அதுவல்ல. என்னவாக இருந்தாலும் சரி, 2-வது எதிரி இதில் குற்றவாளியல்ல என்பதை, என்னைப்போலவே என் நண்பர் ராகவய்யங்காரும் ஒப்புக்கொள்ளுகிறாரல்லவா, அதனால் அதைவிட்டு, உண்மைக் கொலையாளி யார் என்பதை கவனிப்போம். விசாரணையில் காந்தா, தான் பிரத்தியக்ஷமாகப் பார்த்ததாக சொல்லிய அந்த சாக்ஷியேபோதுமானது. அதை எதிரியே மறுக்காதிருக்கும் போது என் நண்பருக்கு ஏன் இத்தனை கவலை?

ராகவ: 1-வது எதிரியின் வாக்குமூலத்தை நண்பர் சரியாக கவனிக்கவில்லை என அறிகிறேன். தான் தான் சுட்டிருக்க வேண்டும் என்பதாகவே அவனுடைய வாக்குமூலத்தின் வாசகம். அதில் சந்தேகத்தொனி இருக்கிறதேயொழிய எவ்வித உறுதியுமில்லை என்பதை நண்பர் கவனிக்கவேண்டும்.

ராம: அதில் சந்தேகப்பட இடம் இருப்பதாக நண்பர் கருதினாலும், காந்தாபோன்ற பிரத்தியக்ஷ சாக்ஷிகள் அதை உறுதி செய்யவில்லையா?

ஸோம: காந்தா! அவள் பிரத்தியக்ஷ சாக்ஷியா? கபடக்காரி! அவள் பார்த்தாள். என் புருஷன் சுட்டதை அவள் பார்த்தாள்! அடி ராக்ஷஸி!

ராம: இந்தவிதம் சப்தம்போடுவதை கோர்ட்டு அனுமதியாது.

ஸோம: சுட்டவள் நான். உண்மையில் அவள் பார்த்திருந்தால், என்னையல்லவா அவள் சொல்லவேண்டும். அதைவிட்டு, என் புருஷனைக் கவர்ந்ததுமல்லாமல் அவரின் அழிவுக்கும் வினையாகிறாள்......

ஜட்ஜ்: வீண் பேச்சு. அம்மா, அமைதியிழந்தால் உண்மையைக் காணமுடியாது. இவ்விதம் இடைமறித்தால் கோர்ட்டு நடப்பது சிரமம்.

ராகவ: பிரத்தியக்ஷ சாக்ஷிகளின் வாக்குமூலம் என எத்தனை கேஸுகளில் அவை எவ்வளவு பிரயோஜனப்பட்டிருக்கின்றன என்பதை நண்பர் அறிந்திருப்பாரென நினைக்கிறேன்.

ராம: பிரத்தியக்ஷ சாக்ஷியத்தைக் குறை கூறுவதைக்காட்டிலும் அது பொய் என ருஜுப்படுத்த என் நண்பர் முன்வந்தால் நல்லது.

ராகவ: ஆம், அதை ருஜுப்பிப்பதற்குள்......

[துப்பறியும் ராஜு பிரவேசம்.]

(உற்சாகமாய்)...ஆம், ருஜுப்பிக்கமுடியும்.

[து. ராஜு, ராகவய்யங்கார் கையில் ஒரு சீட்டுக் கொடுக்கிறான். ராகவய்யங்கார் வாசிக்கிறார். காந்தா துப்பறியும் ராஜுவைப் பார்த்து அஞ்சுகிறாள்.]

ராகவ: யுவர் லார்ட்ஷிப், துப்பறியும் நிபுணர் ராஜு உண்மைக் குற்றவாளியை தக்க ஆதாரங்களுடன் கண்டுபிடித்திருக்கிறார். அவருடைய சாக்ஷியம் மிகவும் அவசியம்.

காந்தா: என் கணவரல்லவா! (ராஜுவிடம் வந்து) இங்கே எங்கு வந்தீர். பெட்டியில் என்ன?

து. ரா: காந்தா, இப்போது நடக்கும் கவிராஜ் கொலை வழக்கில் உண்மை குற்றவாளி யார் எனக்காட்டத் தக்க ஆதாரங்கள்.

காந்தா: அப்படியானால், மிஸ்டர் சுந்தரமா அல்லது கோமதியா? இவர்களில் யார் குற்றவாளியென நிரூபிக்கப்படும்.

து. ரா: நீயே பிரத்தியக்ஷ சாக்ஷி? உனக்கேன் சந்தேகம்?

காந்தா: நிச்சயமாய் அறியவே. என்ன எவிடன்ஸுகள் அவை?

து. ரா: சிறிது நேரத்தில் தெரிந்துவிடும். கொஞ்சம் பொறு.

ராகவ: மிஸ்டர் ராஜு, உம்முடைய எவிடன்ஸுகள்.

து. ரா: இதோ! (பெட்டியை திறந்து நியூஸ் பேப்பர்; ரத்தக்கரைபட்ட சேலை முதலியவற்றைக் கொடுக்கிறான். காந்தா அஞ்சுகிறாள்.)

காந்தா: ஆ! மோசம் போனேன்! என்னை மணப்பதாக வந்தவன் ஒரு துப்பறிபவன். நான் ஏமாந்தேன். இதோ! என்னுடைய உடைகள். இனி நான் தப்பமுடியாது. ஆ! ஐயோ, நான் என்ன செய்வேன்? வெளியேறி விடலாமா? (வெளியே நழுவுகிறாள். து. ராஜு ராகவய்யங்கார் காதில் ரகசியமாய் சொல்கிறார்.)

ராகவ: யுவர் லார்ட்ஷிப், காந்தா இதில் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அவள் தப்பிவிடாதபடி கைதி செய்யப்படவேண்டியது அவசியமென தெரிவிக்க விரும்புகிறேன்.

ஜட்ஜ்: Yes, arrest her.

[ஜவான்கள் காந்தாவை பிடிக்கிறார்கள்.]

காந்தா: என்ன! என்னை ஏன்...?

இன்ஸ்பெக்டர்: பின்னால் தெரியும்.

காந்தா: மிஸ்டர் ராஜு!

து. ரா: காந்தா பொறு. உண்மைக் குற்றவாளி யாரென அறிவாய். (கடிகாரம் 5 மணி அடிக்கிறது.)

ஜட்ஜ்: 23ம் தேதி கேஸ் ஒத்திப் போடப்பட்டிருக்கிறது.

## 36-வது சீன்

## சிறைக்கூடம்

காந்தா: தாகம் நாவை உள்ளிழுக்குதே! தண்ணீர்! ஐயோ தண்ணீர்! உம், தண்ணீர்...எனக்கு எதற்கு? நாளை தீர்ப்பாகிவிடும். நான் தான் சுட்டேன் என துப்பறிபவன் நிரூபித்து

விடுவான். என் உடை உண்மை சொல்லிவிடும். தப்பமுடியாது. தூக்கில் தொங்கப் போகிறேன். அதற்குள் இந்த தாகத்தைப் பொறுக்கமுடியாதா? யார்? கவிராஜ்! கவிராஜ்!! நீ ஏன் இங்கு வந்தாய்? உன்னை நான் பிரிந்து எவ்வளவோ தினங்களானதே! பின் ஏன் இன்னும் என்னைத் தொடர்கிறாய்? கவிராஜ்! உன் விழிகள் பெருக்கின்றன. கையை ஏன் மடக்கி முஷ்டி தட்டுகிறாய்? நீ என்னை நெருங்காதே! நான் உன்னைத் தொலைத்தவள். என்னுடைய ஆற்றலை இன்னும் நீ அறியவில்லையா? என்னிடம் வராதே! ஆ...ஆ...கழுத்தை விட்டுவிடு. ஐயோ விட்டுவிடு. ஏ கவிராஜ்! நீ யார்? உன்னுடன் கைகோர்த்து கடற்கரைக்கு வரமுடியாது. வருகிறதும் வாராததும் என் இஷ்டம். நீ என்னை அடக்கி ஆள முடியாது. நெருங்காதே! ஐயோ, என்னை ஏன் அறைகிறாய். அப்பப்பா! ஆம்...நான் நவநாகரீகப் பெண்களின் பிரதிநிதி. மிஸ்டர் கவிராஜ், நான் நாகரீக வனிதை. அப்படித் தானே? நான் பெண்கள் சீர்திருத்தத்திற்காக போராடப் போகிறேன். அஹஹா! ஏ பெண்களே! வாருங்கள். நம் சுதந்திரத்தை ஸ்தாபிப்போம். நீ என்ன தூண்போல் நிற்கிறாய்? நீயும் ஒரு பெண்ணா? ஆம், நான் கவிராஜனுவை—ஒரு சரியான வாலிபனை சுட்ட வீரப்பெண். ஆ! ஐயோ! நான் நாளை தூக்கில் ஆடுவேன். என்னை உலகம் நகைக்கும். நீ நகைக்கிறாய். ஏ சுவரே நீ நகைக்கிறாய்! ஏ தூணே நீ நகைக்கிறாய். நான் பரிதாபத்திற்கு ஆளாகவா? ஆ! உங்களை...அந்த கவிராஜனுவை சுட்ட அதே கரத்தால் குத்தி வீழ்த்துகிறேன். ஆ...ஆ...!

[அலறி சுவரில் முட்டுகிறாள். ரத்தம் ஒழுகுகிறது.]

ரத்தம்! எனக்கு உற்சாகம் கொடுத்த ரத்தம்! அஹஹா... ஆ! என்ன? கண் பஞ்சடைகிறது. கால்கள் ஆ!......(சுழன்று கீழே விழுகிறாள்.)

## 37-வது சீன்
## சிறைக்கூட வழி

[இரு சேவகர்கள் பிரவேசம்.]

**1வது சேவகர் :** அந்தப்பெண் பைத்தியம் பிடித்து தலையை சுவற்றில் மோதி செத்துவிட்டாள். பலே பேர்வழி அப்பா!

**2வது :** துப்பறியும் ராஜூ மகா நிபுணரப்பா. ரொம்ப தெளிவாக ரூபித்துவிட்டார்.

**1வது :** பாவம் நிரபராதிகள்; இத்தனை நாளாய் சிறையில் வாடி வதங்கிக் கிடந்தனர். இண்ணைக்குத்தான் ஜட்ஜூம் அவர்களை நிரபராதிகளென விடுதலை செய்ய உத்தரவிட்டிருக்கிறார். வாப்பா சீக்கிரம். இன்னமுமா அவர்களுக்கு சிறை.

[சிறைக்கம்பிகளின்மேல் தலையை சாய்த்துக்கொண்டு சுந்தரம் சோகமாயிருக்கிறான். சேவகர் பூட்டைத் திறக்கின்றனர்.]

**1வது :** ஐயா, நீங்கள் குற்றவாளி இல்லை எனவும், காந்தாவே குற்றவாளியென தீர்ப்பாகியிருக்கிறது. அதனால் உங்களை விடுதலை செய்ய உத்திரவு வந்திருக்கிறது.

**சுந் :** எனக்கா விடுதலை? நான் விடுதலை அடைந்தேனா? நானா நிரபராதி? என் மாணிக்கம், கோமு!

**1வது :** அந்தப் புண்ணியவதிக்கும்தான் விடுதலை.

**சுந் :** கோமுவுக்கும் விடுதலை ...?

**2வது :** ஆம்.

**சுந் :** எங்கே என் கோமு! என் அருமைக் கோமு எங்கே? அதோ, அதோ வருகிறாள். கோமதி...என் மரகதமே. (துள்ளி ஓடுகிறான். கோமதி ஓடிவந்து ஆவலாய் அவனை ஸ்பரிஷிக்க முனைகிறாள்.)

என்னை மன்னிப்பாயா? நான் மகாபாவி! நான் தவறிழைத்துவிட்டேன். உன்னை வஞ்சித்து தீராத பழியையும் ஏற்றேன். இனி எனக்கு விமோசனம் உண்டா?

கோம: (அழுதுகொண்டு) நாதா, ஐயோ! என்ன வார்த்தை இது? மன்னிப்பா? நானு மன்னிப்பது. இனி ஒருதரம் இம்மாதிரி சொல்ல வேண்டாம்.

சுந்: என் கோமு! இன்னும் என்மேல் பிரேமையா? இந்தச் சண்டாளன்மேல் இரக்கமா? உத்தம பத்தினியாகிய உன்னை சவுக்கால் அடித்த இந்தக் காதகனை—இந்த பிசாசை—இன்னும் என் கண்ணெடுத்துப் பார்க்கிருய்? ஐயோ நான் மதி கெட்டேன். நீ கற்பு நிலை தவறியதாக மூர்க்கம்கொண்ட இந்த மூடன் உன்னை வதைத்தேனே ஒழிய, தான் செய்த கொடுமையை நினைத்துப் பார்க்கவில்லை.

கோம: ஐயோ! இந்தவிதம் நீங்கள் கலங்கித் தவிப்பதை என்னுல் சகிக்கமுடியவில்லை. பெண் நான். தங்களுடைய தேவி. என்றும் தங்களுக்கு தொண்டுசெய்து கற்பை அணியாகக்கொண்டு அதைக் காப்பாற்றினுல் அதுவே எனக்குப் போதும்.

சுந்: கற்பு! கற்பு! நீ அதைக் காக்கவேண்டும். பெண்களுக்குமட்டும்தானு அந்தக் கற்பு! பெண்கள்தானு அதைக் காக்க வேண்டும். ஆண்களுக்கு அந்த சிரமம் இல்லையா? கோமு, என்னைப்பார். சௌந்தர்ய மனைவியுடன் இல்லற இன்பத்திலிருந்து துன்பத்திற்காளாகி, மனைவியை கொடுமைசெய்து, கொலையாளி எனப் பெயரெடுத்து காராக்கிரகம்போய் தூக்குமேடையும் எட்டிப் பார்க்கும்படி நேரிட்டது. எதனுல்? ஆம். கற்பு நிலை நான் தவறினேன். ஆண்மகனுக்கு, அந்தக் கடமை இல்லை என புறக்கணித்ததின் பலனே இந்த நிற்கதி. கோமு, இன்னொரு தடவை அவ்விதம் சொல்லாதே! உன்னைப்போல் நானும் என் கற்பு நிலை தவருமல் ஏக பத்னி விரதனுக இருந்தால் இப்படி ஏற்படுமா? கற்பு! கற்பு!! அது நீ மட்டுமல்ல, நானும் காக்கவேண்டும். கோமு, பெண்கள்மட்டுமல்ல, ஆண்களும் காக்க வேண்டும்.

கோம: நாதா, வாருங்கள். வீடு போகலாம். சென்றதை நினைத்து இனி வருந்தி என்ன பயன்?

[V. பத்ரா ஓடிவந்து முன் விழுந்து வணங்குகிருர்.]

V. பத்ரா: ஐயோ, உங்கள் கஷ்டத்திற்கு நானே காரணஸ்தன். என்னை மன்னிப்பீர்களாக?

கோம: என்ன?

V. பத்ரா: அம்மா, என் மகளைக் கெடுத்தவனும், அவளுடைய வாழ்க்கையைப்பாழ்படுத்தினவனும் இந்தப்பாவி நான்தான். நவநாகரீகமெனவும், பெண்கள் உரிமையெனவும் ஏதேதோ பேசி என் மகளை உண்மையில் அவளுடைய ஒழுக்கத்திற்கான கல்வி அறிவு போதிக்காது அவளுடைய மனம்போனபடி விட்டதின் கதி இது! நானே இத்தனைக்கும் காரணஸ்தன்.

கோம: நீங்கள் என்ன செய்வீர்கள்!

V. பத்ரா: நான் ஆரம்பத்திலிருந்தே தடுத்து அவளுக்கு சரியான கல்வி அறிவு கொடுத்திருந்தால் இப்படி ஆக முடியுமா? இதிலிருந்தாவது எனது சகோதர, சகோதரிகள் தங்கள் குழந்தைகளுக்கு கோமதிபோல் உயர்ந்த ஒழுக்கத்தையும் கடமையை அறிவதற்கான கல்வியையும் புகட்டி கவனத்துடன் வளர்த்துவரும்படிக்கு, அனுபவித்து கெட்டழிந்தவன் என்னும் நிலையில் வேண்டிக் கொள்ளுகிறேன்.

சுந்: ஐயா, நடந்தவை நடந்துவிட்டன. இனி வருத்தப்பட்டு என்ன பயன்? வாருங்கள் போகலாம். [மூவரும் செல்கின்றனர்.

கூட்டம் பின் தொடர்கிறது.]

## 38-வது சீன்

## சுந்தரம் வீடு

[சுந்தரம் ஊஞ்சலில் படுத்து புத்தகத்தைப் புரட்டிக்கொண்டிருக்கிறான். உள்ளிருந்தபடியே கோமதி 'நாயகபக்ஷமடி' எனும் பாடல் பாடுகிறாள். சுந்தரம் புத்தகத்தை மூடிவிட்டு ரஸிக்கிறான்.

சுந்: ஏது கோமு. சமையலறைக்குள்கூட பாடல் முழங்குகிறதே!

[கோமதி சிரித்துக்கொண்டு வருகிறாள்.]

கோமதி, உன் நாயகர் பக்ஷத்தை சதா விலை மதிப்புப் போட்டுக்கொண்டிருக்கிறாயா?

கோம: போட்டுத்தான் பார்க்கிறேன். விலை மதிக்க என்னால் முடியவில்லை.

சுந்: அவ்வளவு பெரிதா? ஆஹா எவ்வளவு இலகுவாக அதை நீ அடைய முடிந்தது!

கோம: அது என் பாக்கியம்.

சுந்: நீ அடைந்த கஷ்டத்தை மறந்து விட்டாயோ!

கோம: கிடைத்தவரை நான் பாக்கியவதி!

சுந்: (சிரித்துக்கொண்டு) உம், எங்கே உன் வேணுகானக் குரல்; அதை இன்னம் ஒருதடவைப் பாடு. நான் கேட்டு மகிழ்கிறேன்.

கோம: ஆஹா! (பாடுகிறாள்.)

# ஸ்ரீ ராமபாணம்

## மேக நிவாரணி எண்ணெய்




இளந்தைப் பருவத்தில் பற்பல மாதர்களிடம் பகலிரவின்றி நாடோறும் லீலை புரிவதினால் மூலத்திலிருந்து சடராக்கினி மேலெழுந்து வீர்துவை நீற்றச்செய்து வெளிக்காணுகையில் நாபியிலிருந்து அக்கினி பற்றி ஆண் குறியின் துவார வழி முழுமையும் ரணமாகி மேக ரோகத்தை விளைவிக்கும் மேக ரோகங்கள் யாவும், மற்றும் கருங்கிரந்தி, செங்கிரந்தி, அரிகிரந்தி, கள்ளிப்பூ கிரந்தி, ஆலங்கா கிரந்தி, அரையாப்பு, பவந்திரம், கண்டமாலை, விப்புருதி அவைகளைச்சேர்ந்த சூலைகள், எலும்புச் சூலைகள், எலும்பு க்ஷயங்கள், பலவித சொறி சிரங்குகள், காணுத்தலங்களில் வரக்கூடிய அத்தனைவித கட்டிகள், ரணங்கள் மற்றும் மேக ஊரல், மேக வெட்டைப்பிடிப்பு, மேக சூட்டினால் ஏற்படும் வாய்ப்பண் ரணங்கள், மேகத் தடிப்பு, கையில் ஊரல், யோனிப்புத்து, கண்டமாலை, சூலைகள், ரணங்கள் முதலிய அநேக கொடிய ரோகங்களையும் பூரண சுகப்படுத்தும். விபர ஜாபிதா எழுதினால் அனுப்புவோம்.

**6 வேளை பாட்டில் 1-க்கு ரூ. 12.**

தபால் சார்ஜ் பிரத்தியேகம்:

**RM. A. முத்து & கோ.,**

T. B. & ஆஸ்த்மா ஸ்பெஷலிஸ்ட்,

8, தெற்குமாசி வீதி, : : மதுரை.

THE C. M. V. MADURA.